# கொஞ்சும் தமிழில்
# குஞ்சரமுகத்தோன் பாட்டும் புராணமும்



## கற்பக விநாயகர்

சோனாரி, ஜாம்ஷெட்பூர்.

சுசீலா சுப்ரமணியன்

# முன்னுரை

**மகாகணபதிக்கு ஜே!** என்று சொல்லி எந்த ஒரு நிகழ்ச்சியையும் ஆரம்பிக்கும் ஜம்ஷெட்பூர் ஸ்ரீமான் **எஸ்.என்.ஐயர்** பற்றி பலரும் அறிவர். சுமார் 90 ஆண்டுகளான **மதராசி சம்மேளனியும்,** சுமார் 60 ஆண்டுகளான **தட்சிண பாரத மகிளசமாஜ் பள்ளியும்** அவரின் மேற்பார்வையில் எழுந்த அன்றைய மாபெரும் கட்டிடங்களே. சோனாரியில் விநாயகனுக்கு தனிக்கோவில் கட்டித்தர நினைத்த அவரது ஆசையை அவரது மகன் **திரு. சுப்பிரமணியன்** நிறைவேற்றினார்.

**ஸ்ரீமான் எம்.எஸ்.ராஜன், ஸ்ரீமான் சி.பி.எஸ். மணி** இருவரின் ஒத்துழைப்புடன் கோவில் கட்ட ஆரம்பித்தார். 28.01.2000 அன்று காலை **ஸ்ரீமான் ராஜுசாஸ்திரிகள்** கணபதி ஹோமம் செய்து ஆரம்பிக்க, **காஞ்சி காமகோடி மடாதிபதி ஜகத்குரு ஸ்ரீஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள்** அவர்களின் பொற்கரங்களினால் அடிக்கல் நாட்டப்பட்டு, **திரு. மகான்சிங்** என்கிற சீக்கியரின் மேற்பார்வையில் கோவில் கட்டப்பட்டது.

01.09.2000 விநாயகசதுர்த்தி அன்றே **ஸ்ரீமான் கிருஷ்ணமூர்த்தி கனபாடிகள் (பாபு சாஸ்திரிகள்) ஸ்ரீமான் நரசிம்மாச்சாரி ஐயங்கார் (ராமர்கோவில்)** இருவராலும் கும்பாபிஷேகம் செய்யப்பட்டது.

எட்டுத்தளங்கள் கூடிய தாமரையில் வீற்றிருப்பவர் போல எண் கோணவடிவிலான கோவிலில் அமிர்த கலசத்தை வலம்புரியில் ஏந்தி **'கற்பகவிநாயகர்'** பக்தர்க்கருள கோவில் கொண்டார். ஞாலமுதல்வனாம் விநாயகர் அசுரரிடமிருந்து அமரரை காத்ததும், திரிபுரனை வெல்ல தந்தைக்கும், பண்டாசுரனை வெல்ல தாய்க்கும், தாருகாசுரனை வெல்ல தம்பிக்கும், மது, கைடபர், இரண்யன், பலி போன்ற அசுரரை வெல்ல மாமனுக்கு உதவியதையும், பல பக்தர்களுக்கு அருளியதையும், விநாயகபுரானம் படித்தால் தெரியவரும். இன்றைய இயந்திர வாழ்க்கையில் புராணம் படிப்பதோ, கேட்பதோ இயலாத காரியம். அவனியில் பிறந்து, ஆயுள் முடிந்து ஆத்மா நல்கதி அடைவது வரை வரும் தடங்கல்களை அகற்றி அருள் செய்ய நாம் விக்ன விநாயகனை வழிபடுவோம்.

பாட்டு, கதை என்றால் குழந்தைகள் மகிழ்வது போல, குழந்தை தெய்வமாம் குஞ்சரமுகத்தோனின் புராண கதையையும், அவரது லீலைகளையும், கொஞ்சும் எளிய தமிழில் தெரிந்த மெட்டில் பாட்டாக பகவான் அருளாளாலும் ஸ்ரீகாஞ்சிகாமகோடி மடாதிபதி ஸ்ரீஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் ஆசியுடனும் எழுதி இருக்கிறேன்.

இதை அனைவரும் படித்து, பாடி வாழ்க்கையில் இன்புற்று, குஞ்சரமுகத்தோன் அருள்பெற்று வாழ குஞ்சரமுகத்தோனை பக்தியுடன் பணிந்து வணங்குகிறேன்.

2008 ஆம் ஆண்டில் சம்ஸ்கிருத மொழிக்காக சிறந்த சேவை செய்து, ஜனாதிபதியின் பரிசு பெற்ற பாஷ்யமணி Dr. A. சிவராம கிருஷ்ண சாஸ்திரிகள் அவர்கள் இப்புத்தகத்திற்கு அணிந்துரை எழுதி கொடுத்ததை பெருமையாக கருதி என் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

2005–ஆம் ஆண்டு எழுதிய கொஞ்சும்தமிழில் குஞ்சரமுகத்தோன் பாட்டு என்ற புத்தகம் பற்றி ஆஸ்தான வித்வான் ஸ்ரீசிருங்கேரி ஸ்ரீசாரதாபீடம் ஸ்ரீதியாராஜன் அவர்கள் பாராட்டி எழுதியது பற்றி மகிழ்ச்சி அடைகிறேன். அவர் எழுதிய கடிதத்தில் என் மனம் கவர்ந்த சிலவரிகளை கீழே எழுதியிருக்கிறேன்.

பக்தியுடன்,

**சுசிலா சுப்ரமணியன்**

**Mrs. SUSHILA SUBRAMANIAN**
Flat No. 62, Block-C, Mark Residency,
12, V.O.C. Road, Contonment,
Trichirapalli - 620 001.
Cell : 9245121577.

# அணிந்துரை

கற்பக விநாயகர் குறித்து திருமதி. சுசிலா சுப்ரமணியன் நமக்கு தெரிந்த பலமெட்டுகளில் பாடல்கள் எழுதியுள்ளார். தங்கக்கம்பியில், நவரத்தினங்களையும் கோர்த்தாற்போல் சொல்நயம், பொருள் நயத்துடன் எழுதியுள்ளார்.

கொம்பை ஒடித்து பாரதம் எழுதியது, சந்திரனின் சாபம் நீக்கியது, அன்னையின் கோபம் தணித்தது, அன்னை தந்தையே அகிலமென வலம்வந்தது எனபல செய்திகளையும், அன்னை, தந்தை, தம்பி, மாமன் அனைவரும் மலைமேல் இருப்பதால் நீயும் திருச்சி மலை உச்சியில் அமர்ந்தாயோ என்பதும், யானைமுகம் வைத்திருப்பதின் காரணம் கேட்டு எழுதியிருப்பதும் வியக்கத்தக்கவை.

19–ஆம் பாட்டில் உறவுமுறை, உருவம் பற்றி, அமரருக்கு உதவியது, அசுரவதம், அருகின் பெருமை, பிள்ளையாருக்கே உரித்தாள தோப்புக்கரணம், குட்டிக்கொள்ளல், சிதறுகாய் பற்றி எழுதி இருப்பது ரசிக்கத்தக்கது. பாட்டு 27–இல் ஒவ்வொரு வரியிலும் ஒவ்வொரு நாமாவின் அர்த்தமோ அல்லது கதையோ அடங்கி இருக்கிறது. 170 நாமாக்களால் அர்ச்சனை கூட செய்யலாம். 31–ஆம் பாட்டில் மகா கணபதியின் தோற்றம் பற்றியும் அனைத்து தேவருமாய் ஓருருவானவர் என்று மிக அழகாக எழுதியுள்ளார்.

பாட்டு 33–இல் கல்லுப்பிள்ளையார் என அழைப்பதன் காரணத்தை நயம்பட எழுதியிருக்கிறார். 35–ம் பாட்டில் சிவன், முருகனிடம் சொன்ன விநாயகரின் முக்கிய 12 அவதாரங்களும், அதில் அவர் செய்த முக்கிய லீலையையும் எழுதியதை படிக்கும்போது விநாயகர் அவதாரம் பற்றி தெரியவருகிறது. 21, 37–ஆம் பாட்டுகளில் விநாயகர் செய்த நன்மைகளை எழுதி உள்ளார். 39–ஆம் பாட்டில் பல பிரசித்திபெற்ற கணபதி, பிள்ளையார், விநாயனைபற்றி எழுதியிருப்பதும், பாட்டு 40–ல் அ,ஆ,வரிசையில் விநாயகனின் நாமத்தை வரிசைப்படுத்தி எழுதியிருப்பதும் மிக அற்புதமாக உள்ளன. பாட்டு 41–இல் விநாயகருக்கு என்னென்ன பெயர் உண்டோ அதற்கான கதையுடன் அஷ்டோத்ரசதம் (108) எழுதியுள்ளார். அவற்றைப் படிக்கையில் உட்கார்ந்த இடத்திலிருந்தே அனைத்து விநாயகர் பற்றிய செய்தி தெரியவருகிறது.

விநாயக புராணம் உபாஸனா காண்டத்தில் 31 தலைப்புகளில் பல வரலாறுகள், பல கதைகள், இதுவரை கேட்டிராத விஷயங்களை தொகுத்து எழுதியது பாராட்டத்தக்கது. புராணம் முழுவதும் ஒரே நாளில் படிக்க இயலாது. ஆனால் விநாயகபுராணம் முழுவதையும் நன்றாக கற்று அதை

1008 வரியில் 'பிள்ளையாரப்பா' என சேர்த்து அழகாக எழுதியுள்ளதை ஒருமணியில் பாடி விநாயகபுராணம் படித்த புண்ணியம்பெற செய்திருப்பது பெருமைக்குரிய விஷயம். 'பிள்ளையாரப்பா' என சேர்க்காமலும் புராணக்கதையாக படிக்கலாம்.

பிருகுமுனி சொல்லி சோமகாந்தன் விநாயக புராணம் கேட்டு தன் நாட்டினருடன் கணேச லோகம் சென்றான். அதுபோல் இப்பாடல்களை படிக்கும் அனைவருக்கும் எல்லா செல்வங்களையும் அள்ளிக்கொடுத்து அருள்பாலிக்குமாறு கற்பக விநாயகரை வேண்டுகிறேன். இப்பாடல்களை பக்தியுடன் எழுதிய சுசிலா சுப்ரமணியன் குடும்பத்தாரும் சீரும் சிறப்புமாக வாழ்ந்து எல்லா நன்மைகளையும்பெற கற்பக விநாயகர் அருள்புரிவாராக.

பாஷ்யமணி Dr. A. ***சிவராமகிருஷ்ண சாஸ்திரி***
Principal, Jagadguru Vidyasthanam,
Thiruvanaikovil

**ஸ்ரீ வி. தியாகராஜனின் கடிதம்**

ஞானசம்பந்தரின் தேவாரத்தை 'கொஞ்சுதமிழ்'
அப்பர் பெருமானின் தேவாரத்தை 'கெஞ்சுதமிழ்'
சுந்தரமூர்த்திகள் தேவாரத்தை 'விஞ்சுத்தமிழ்'
என்பார்கள்.தங்களது 'கொஞ்சும்தமிழ்'
புத்தகம் மிக நன்றாக உள்ளது.

ஸ்ரீராமகதாரத்ன
***ஸ்ரீ வி. தியாகராஜன்***
05.09.2005

## 1. ராகம் - பூபாளம்

கற்பக விநாயக சரணம் கணேசா
காண்பவர் குறை தீர்ப்பாய் சரணம் கணேசா
கிட்டத்தில் வந்தமர்ந்தாய் சரணம் கணேசா
கீர்த்தி பெற விளங்க வைப்பாய் சரணம் கணேசா
கும்பிட வந்தோம் நாங்கள் சரணம் கணேசா
கூப்பி வணங்கிடுவோம் சரணம் கணேசா
கெட்டவினை அகற்றிடுவாய் சரணம் கணேசா
கேட்டவரம் தந்திடுவாய் சரணம் கணேசா
கைலாசபதி மைந்தா சரணம் கணேசா
கொழக்கட்டைப் பிரியனே சரணம் கணேசா
கோவில் கட்டி வலம் வருவோம் சரணம் கணேசா
கௌரீ புத்திரனே சரணம் கணேசா
கந்தனுக்கு மூத்தோனே சரணம் கணேசா
கற்பக விநாயக சரணம் கணேசா
கற்பக விநாயக சரணம் கணேசா
கற்பக விநாயக சரணம் கணேசா.

## 2. சித்தி கணபதியே சிவனின் மகனே

('சின்ன சின்ன பதம் வைத்து" போல் பாடவும்)

1. சித்தி கணபதியே சிவனின் மகனே
நித்தம் தரிசிப்பேன் வா வா வா உன்னை
நித்தம் தரிசிப்பேன் வா வா வா
கந்தனின் சோதரனே உமையவள் பாலகனே
கற்பக விநாயகா வா வா வா
கண்கண்ட தெய்வமே வா வா வா (சித்தி)

2. சம்பா, மல்லி, தாமரை, மலரால்
சகஸ்ரார்ச்சனை செய்வேன் வா வா வா
தும்பிக்கையானே, தும்பிக்கையானே
துணை புரிவாயே, துணை புரிவாயே
துதிக்கின்றோம் நாங்கள் வா வா வா உன்னை
துதிக்கின்றோம் நாங்கள் வா வா வா (சித்தி)

3. அறுகம்புல்லுக்கு மகிமை தந்த
அங்குச பாசனே வா வா வா
எருக்கம் பூவும் எருக்கம் பூவும்
வன்னி கொன்றையும் வன்னி கொன்றையும்
சூட்டியவனே நீ வா வா வா மலர்
சூட்டியவனே நீ வா வா வா (சித்தி)

4. மண்ணில் பிறந்தோர் மனக்குறை அகற்ற
மகிழ்வுடனே நீ வா வா வா.
காணவரும் உன்னைக் காணவரும்
பக்தர்க்கெல்லாம் பக்தர்க்கெல்லாம்
காட்சி தர நீ வா வா வா திவ்ய
காட்சி தர நீ வா வா வா (சித்தி)

5. கொம்பை ஒடித்து பாரதம் எழுதிய
கொழுக்கட்டைப் பிரியனே வா வா வா
கொண்டாடுவோம் கொண்டாடுவோம்
கோவில் கட்டி கோவில் கட்டி
கோலாகலத்துடனே வா வா வா - நீ
கோலாகலத்துடனே வா வா வா (சித்தி)

## 3. ஓங்காரப் பரம்பொருளே கணபதி

('ஓம் ஜய ஜகதீச ஹரே' போல் பாடவும்)

1. ஓங்காரப் பரம் பொருளே கணபதி
உமையவள் பாலகனே
உன்னையே துணை என நம்பி நாங்கள்
உன் புகழ் பாட வந்தோம் கணபதி
உன் புகழ் பாட வந்தோம்.

2. அறுகம்புல்லால் அர்ச்சித்து உன்னை
அலங்காரம் செய்திடுவோம் ஆனைமுகா
அலங்காரம் செய்திடுவோம்
அற்புதமான அமிர்த கலச
வலம்புரி விநாயகனே
அடியாரைக் காத்தருள்வாய்.

3. அன்னையும் பிதாவுமே அகிலமென நீ
அறிய வைத்தாய் கணேசா அகிலம்
அறிய வைத்தாய் கணேசா
ஔவை பாட்டிக்கு கயிலை தந்தது போல
ஆசி வழங்கிடுவாய் நல்
ஆசி வழங்கிடுவாய்.

4. அங்குச பாசமும் கொம்பும் தரித்த
சங்கரன் புதல்வனே நீ ஐங்கரா
சங்கரன் புதல்வனே நீ
சந்திரன் சிரித்ததால் சாபம் கொடுத்து நீ

சதுர்த்தி பண்ண வைத்தாய் சங்கடஹர
சதுர்த்தி பண்ண வைத்தாய்.

5. கற்பூர ஆரத்தி காணவந்தோம் நாங்கள்
கந்தனின் சோதரனே சோனாரி
கற்பக விநாயகனே
வெற்றிகள் பல பெற மனதில் அமைதி தர
பற்றி நின்றோம் உன் பாதம் இறுக
பற்றி நின்றோம் உன் பாதம். (ஓங்காரப் பரம்)

## 4. விநாயகா விநாயகா கற்பக விநாயகா

('பிள்ளையார் பிள்ளையார்' போல் பாடவும்)

1. விநாயகா, விநாயகா, கற்பக விநாயகா
விக்னமெல்லாம் தீர்த்தருளும் விக்ன விநாயகா.
பார்வதியின் புத்திரனே, பரமசிவன் மைந்தனே
பன்னிருகை வேலவனின் பாசமுள்ள சோதரனே (விநா)

2. எண்ணை அபிஷேகமும், இளநீர் அபிஷேகமும்,
பஞ்சகவ்ய, பஞ்சாமிர்த, பழச்சாறு அபிஷேகம்
பால், தயிர், தேன், நெய், கருப்பஞ்சாறு அபிஷேகம்,
பன்னீர் கலந்த சந்தனாபிஷேகம் பதினொன்று செய்வோம்(விநா)

3. மயக்கும் சம்பா, தாமரையும், மணக்கும் மல்லி, முல்லையுடன்
மனங்கவரும் ரோஜாவுடன் மந்தாரைப்பூ கொண்டு வந்து,
மலர்களாலே அலங்கரித்து மனம் உருகி பாடிடுவோம்
மனக்குறையை அகற்றிடவே மகேசன்மகனே விரைந்துவா(விநா)

4. சிவந்தநிற செம்பருத்தி, நீலநிற சங்க புஷ்பம்,
வெள்ளை, மஞ்சள் நிறங்களென பலவண்ணப் பூக்களுடன்
பச்சை அருகம்புல்லுடன், எருக்கம் பூவும் சேகரித்து
பக்தியுடன் அர்ச்சிப்போம் உன்னை பக்தரைக்காக்க பறந்துவா (விநா)

5. அப்பம், வடை, கொழுக்கட்டையும், அநேகரக சுண்டல்களும்
அவல், பொறி, எள்ளுருண்டை, அனைத்துப் பணியாரமும்
முக்கனியும், மாதுளையும், முக்கண் உடைய தேங்காயும்
முறைப்படியே நிவேதிப்போம்முதல்வனே நீ வா வா வா
ஞால முதல்வனே நீ வா வா வா (விநா)

# 5. தும்பைப்பூவை கொண்டு வந்து 'காவடிசிந்து'

('ரோஜாப்பூ கொண்டு வந்து' போல் பாடவும்)

1. தும்பைப்பூவை கொண்டு வந்து எங்கள்
தும்பிக்கையானை பூஜை செய்தால்
துன்பம் எல்லாம் பறந்து போகும்
இன்பம் வாழ்வில் பொங்கி வரும்.

2. மகிழம் பூவை கொண்டு வந்து எங்கள்
மகேசன் மகனை பூஜை செய்தால்
மணம் வேண்டும் வரன்களுக்கு திரு
மணத்தை நன்கு நடத்தி வைப்பான்.

3. பாதிரிப்பூவை கொண்டு வந்து எங்கள்
பார்வதி புத்திரனை பூஜை செய்தால்
பாரினிலே குலம் தழைக்க
பல வாரிசு நல்லதாய் தந்திடுவான்.

4. முல்லைப்பூவை கொண்டு வந்து எங்கள்
முருகன் சோதரனை பூஜை செய்தால்
மூஷிக வாகனத்தின் மேல் ஏறி நம்
முன்னே வந்து நின்றிடுவான்.

5. அருகம்புல்லை கொண்டு வந்து எங்கள்
திருமால் மருமகனை பூஜை செய்தால்
விரும்பிய எண்ணத்தை ஈடேற்றிட
தருண கணபதியே தயை புரிவான்.

6. பவழ மல்லியை கொண்டு வந்து எங்கள்
பாலசந்திரனை பூஜை செய்தால்
பாவங்களைப் போக்கி நம்மை
பாரில் புகழோடு வாழ வைப்பான்.

7. தாழம்பூவை கொண்டு வந்து எங்கள்
வேழ முகத்தோனை பூஜை செய்தால்
வாழ உலகினில் வளமுடனே
வாழ்த்தி அருளைத்தந்திடுவான்.

8. தாமரைப்பூவை கொண்டு வந்து எங்கள்
சாமரகர்ணனை பூஜை செய்தால்
சாகரமாம் இந்த சம்சாரத்தை
சந்தோஷமாய் கடக்கச் செய்வான்

9. மாதுளம்பூவை கொண்டு வந்து எங்கள்
வேதநாயகனை பூஜை செய்தால்
தாமதம் செய்யாமலே கலையில்
மேதையாக ஆக்கிடுவான்.

10. மந்தாரைப்பூவை கொண்டு வந்து எங்கள்
தந்தின் முகத்தோனை பூஜை செய்தால்
மந்தஹாஸத்துடன் வந்து
செந்தமிழில் பாடவைப்பான்

11. தொடுத்து மலர் மாலை அணிவித்து
தோப்புக்கரணம் போட்டாலே
எடுத்த வேலையை முடித்துத்தர
தடுக்கும் இடர்களை தகர்த்தெரிவான்

12. கற்பக விநாயகரை தினந்தோறும் நாம்
சொற்ப நேரம் கண்டு வணங்கினால்
அற்பப் பிறப்பை தவிர்த்திடுவான்
அஷ்ட ஐஸ்வரியம் அளித்திடுவான்
நமக்கு சொர்க்கம் போல வாழ்வளிப்பான்.

## 6. அன்பு பெருகுதையா கணேசா

('உள்ளம் உருகுதையா' போல் பாடவும்)

1. அன்பு பெருகுதையா கணேசா
அருகினில் காண்கையிலே.
ஆனைமுகம் பார்த்ததுமே கணேசா
ஆனந்தம் கொண்டேன் ஐயா. (அன்பு)

2. ஐங்கரம் உள்ளவனே கணேசா,
சங்கடம் தீர்ப்பவனே,
அகங்காரம் அடக்கவே கணேசா,
அசுரரைக் கொன்றொழித்தாய். (அன்பு)

3. வன்னி விநாயகனை தொழுத விஷ்ணு,
இரண்யனை வதம் செய்தான்
வாமன கணபதியை வணங்கி (முதல் தரம்)
கணபதியை வணங்கி திருமால் (2-ம் தரம்)
மகாபலியை வென்றான். (அன்பு)

4. அண்டத்தை வயிற்றில் வைத்தாய் விபீஷணனின்
அரங்கனை தரையில் வைத்தாய்.
அகிலாண்டேஸ்வரியின் கோபம் (முதல் தரம்)

ஈஸ்வரியின் கோபம் தணித்தாய் (2-ம் தரம்)
நம்பியின் அமுதுண்டு வேதம் ஓதினாய். (அன்பு)

5. பக்தியுடன் நம்பிக்கை கொண்டு கணேசா,
நித்தம் உன்னை வணங்குவோர்க்கு,
சித்தி புத்தியுடன் வந்து கணேசா,
சித்தம் மகிழச்செய்வாய். (அன்பு)

## 7. காக்க வேண்டும் எங்களை கணபதியே நீ

('காக்க வேண்டும் நங்களை பரதேவதே' போல் பாடவும்)

1. காக்க வேண்டும் எங்களை கணபதியே நீ,
பார்க்க வேண்டும் பக்தர்களை அருட்பார்வையால். (காக்க)

2. எண்ணை விளக்கு ஏற்றினோம் எல்லா மலரும் சூட்டினோம்,
பண்ணிய பாவங்களை மன்னித்தருள வேண்டினோம். (காக்க)

3. கனவில் உன்னை காண்கிறோம், நனவில் உன் நாமம் நவில்கிறோம்,
மனதில் உன்னை நிருத்தியே மங்கள கீதம் பாடினோம். (காக்க)

4. அனைத்து செல்வம் இருந்தாலும் அரியணையில் அமர்ந்தாலும்,
அகத்தினிலே அமைதி பெற, ஆனைமுகனை அடிபணிந்தோம். (காக்க)

## 8. ராகம் ஹிந்தோளம்

பல்லவி

கணபதியே நீ தயை புரிவாயே காண்பவர்க்கெல்லாம்
கருணை செய்வாயே.(கணபதியே)

அனுபல்லவி

கஜமாக வடிவெடுத்து கந்தனின் மணம் முடித்தாய்
காக்கையாய் உருக்கொண்டு கமண்டல நீர் தட்டிவிட்டாய்.
காக்கையாய் உருக்கொண்டு காவிரி நீர் பாயவைத்தாய்.(கண)

சரணம்

அருகம்புல் மகிமையை ஆசிரியைக்கு ணரவைத்தாய்
ஆதிசேஷன் பக்திக்கிரங்கி ஆபரணமாய் அணிந்து கொண்டாய்
பழம் பெறவே நீ மூஷிகத்தில் பவனி வந்தாய் - மாம்
பழம் பெறவே நீ மூஷிகத்தில் வலம் வந்து

அம்மைஅப்பனே அகிலமெனஅனைவரையும் அறியவைத்தாய் (கண)

1. அந்தண சிறுவனாக, ராவணன் கை லிங்கம் வாங்கி
   அவனியில் வைத்ததை அமரர்க்குதவி செய்தாய்.
2. அந்தண சிறுவனாக, ராவணன் கை லிங்கம் வாங்கி
   அவனியில் வைத்ததை அறியாமல் குட்டு பெற்றாய்.
   தும்பிக்கையால் நீ தூக்கி எறிந்தவனை
   குருதி வர குட்டிக்கச் செய்து கேட்டவரம்கொடுத்திருந்தாய்.(கண)

## 9. ராகம் கானடா

('அலைபாயுதே கண்ணா' - போல் பாடவும்) பல்லவி

அலைபாயுதே கணேசா என் மனம் அலைபாயுதே
உன் ஆனை முகம் கண்டு ஆனந்தம் கொள்ள மனம் (அலை)

அனுபல்லவி

கலைகள் பல கற்க அருள்வாய் நீ என (முதல்தரம்)
கவலை இல்லாதிருக்க அருள்வாய் நீ என (2ஆம் தரம்)
கற்பகக்களிரே உன்னைக்கண்டு பாடவந்தோம் கணநாதனே. (அலை)

சரணம்

தந்தை சிவனோ கயிலயங் கிரிவாசன்
அன்னை உமையோ மலையரசனின் மகள்
தம்பி கந்தனோ மலை மேல் அமர்ந்தோன் (சங்கதி - 1)
தம்பி கந்தனோ பழனி மலை மேல் அமர்ந்தோன் (சங்கதி - 2)
தம்பி கந்தனோ ஸ்வாமி மலை மேல் அமர்ந்தோன் (சங்கதி - 3)
தம்பி கந்தனோ மலைகள் மேல் அமர்ந்தோன் (சங்கதி - 4)
தாய்மாமன் விஷ்ணுவும் வேங்கடகிரி வாசன்
தானும் மலை மீது அமர வேண்டுமென
திருச்சி மலை உச்சியில் அமர்ந்தாயோ.
ப்ரணவப்பொருளினை தம்பி சொன்னானென
ஆயிரம் நாமம் தந்தைக்குரைத்தாயோ
அமரரும் தேவரும் அவனியில் அனைவரும்
அடிபணியும் ஞால முதல்வனே
கதறி வந்த அமரர் உயிர் காத்தாயே
அந்தாதி பாட பட்டருக்கருளினாயே
கஜமுகனே கணபதியே கஜமுகனே கணபதியே
எனை காக்க வருவாயே
உன்னை கும்பிடும்போது சஞ்சலம் தீர்ந்து
தினம் தினம் என் மனம் மகிழ்வு பெற்றிட (அலை)

## 10. கணேசா கணேசா ஓடிவா

('கண்ணா, கண்ணா ஓடிவா' - போல்பாடவும்)

கணேசா, கணேசா ஓடிவா, கற்பக கணேசா ஓடிவா.

யானைமுகத்தோற்றமுடன் அண்டம் தாங்கிய வயிற்றுடன் (கணேசா)

1. உமையவள் பெற்ற புதல்வனே
உலகினர் வணங்கும் முதல்வனே
உன்னையே துணை என நம்பி வந்தோம்
உன் புகழ் பாடவே ஓடிவந்தோம். (கணேசா)

2. அருகம்புல்லுக்கு மகிமைதந்தாய்
ஆதிசேஷனை அணிந்து கொண்டாய்
அற்புத வலம்புரி விநாயகனாய்
ஆலமரத்தின் கீழ் அமர்ந்து கொண்டாய் (கணேசா)

3. தந்தை சிவன்போல் அபிஷேகம்
தாய்மாமன் விஷ்ணுபோல் அலங்காரம்
அன்னை உமைபோல் பாசத்துடன்
அனுக்கிரகம் செய்ய வந்திடுவாய். (கணேசா)

4. எத்தனைபெரிய வயிறென்றாலும்,
ஏறும் வாகனம் மீஞ்சூரென்றாலும்,
சித்தத்தில் உன்னையே நினைத்திருக்கும்
பக்தரை காக்க வருவாய் மின்னல் வேகத்தில், (கணேசா)

5. எடுத்த ஜென்மத்தின் பலன் நாங்கள்
கொடுத்து வைத்தோம் உனக்கு கோவில்கட்ட,
தடுக்கும் விக்னத்தை தகர்த்தெறிந்து
தடுத்தாட்க் கொள்வாய் கஜமுகனே. (கணேசா)

## 11. கணபதி உன்னை தினம் வணங்கிடுவோமே

('ஜனகணமன" போல் - பாடலாமா)

கணபதி உன்னை தினம் வணங்கிடுவோமே
ஜெகமெங்கும் அமைதியை தருவாய்.
நெஞ்சத்தில் உன்னை நினைத்து வந்தோமே
பஞ்சமில்லா வாழ்வு தருவாய்.
குஞ்சரமுகத்தோனே ஐந்து கரத்தோனே
சஞ்சலம் தீர்க்க நீ வருவாய்.
கலை பல கற்க நீ அருள்வாய்.

(அல்லது கவலையில்லாதிருக்க அருள்வாய்)

வளமுடன் வாழ நீ வாழ்த்துவாய்.
நோய், நொடி, வாராமல் காப்பாய்.
ஜனன, மரண பயம் போக்கிடுவாயென
சரணடைந்தோம் உந்தன் பாதம்.
கணேசா, கணேசா, கணேசா
கண்கண்ட தெய்வமே கணேசா, கற்பக விநாயக கணேசா.

## 12. அகிலம் படைக்க

('ஒளிபடைத்த கண்ணினாய் வா வா வா' - ராகத்தில் பாடவும்)

அகிலம் படைக்க பிரமன் தொழுதான் வா வா வா திரு
ஆனைக்கா அன்னையின் உக்ரம் தணித்தாய் வா வா வா.
இந்திரனுக்கு காவிரி தந்தாய் வா வா வா.
ஈசனுக்குந்தன் நாமம் சொன்னாய் வா வா வா.
உத்திராடத்தின் அதி தேவதையே வா வா வா.
ஊரும் எலியாய் கஜமுகனை செய்தாய் வா வா
எமனை உதைத்து தோழரை மீட்டாய் வா வா வா.
ஏறியமயிலை தம்பிக்கு தந்தாய் வா வா வா.
ஐங்கரன் உன்னை அங்காரகன் தொழுதான் வா வா வா.
ஒடித்துக் கொம்பால் பாரதம் எழுதினாய் வா வா வா.
ஓங்கார வடிவம் கொண்டாய் வா வா வா.
ஔவைக்கு ஞான வடிவு தந்தாய் வா வா வா.
அமரர்க்கு முதல்வனே வா வா வா.
ஆனந்த முகத்தோனே வா வா வா.
இன்னல்களை களைபவனே வா வா வா.
ஈசனுக்கு ஈசனே வா வா வா.
உலகைவைத்தாய் வயிற்றினுள்ளே வா வா வா.
ஊறு செய்தோரை கொன்றாய் நீ வா வா வா.
எண்ணங்களை நிறைவேற்ற வா வா வா.
ஏற்றுப்பாட்டை அருள் செய்ய வா வா வா.
ஐம்புலனால் அடிபணிந்தோம் வா வா வா.
ஒருகுறையின்றி வாழச் செய்வாய் வா வா வா.
ஓங்கு புகழ் பெற அருள்வாய் வா வா வா.
ஔவுலகிலும் இன்பம் தர வா வா வா.
கற்பக விநாயகா காட்சி தரவா (2ம் தடவை) கற்பக... வா வா
3ம் தடவை கற்பக.... வா வா வா (4ம் தடவை கற்பக.... தருவாய்)

## 13. ராகம் மாண்டு

('பக்தியால் யான் உன்னை' போல் பாடவும்)

வந்துன்னை வணங்க நான் வந்தேனே - நற்
சிந்தனை தரும் சித்தி கணபதியே.
செந்தமிழால் உன்னை பாடவைத்து - நற்
சந்ததி தரும் சக்தி கணபதியே
மனதாலே நினைத்துன்னை மலராலே அர்ச்சித்தால்
மனத்துயர் தீரும் மகா கணபதியே - நற்
குணம்தந்து தேக நலன் தந்து உன்னை
கணமும் மறவாதிருக்கச் செய்வாய். - நற்
குணம் தந்து தேக நலன் தந்து உன்னை
கணமும் மறவேன் கற்பக விநாயகனே.

## 14. விக்னத்தை தீர்ப்பான் விநாயகன்

('தீராத விளையாட்டுப் பிள்ளை' போல் பாடவும்)

விக்னத்தை தீர்ப்பான் விநாயகன் தன்
பக்தரை காப்பதில் நாயகன் அவனே (வி)
கணநாதனே என்றழைத்தால் மறு
கணமே மனதிலே வந்து அருள்வான்.
வேழமுகனை நினைத்தால் (2தடவை)
வேதனை தீர்த்து வாழச்செய்வான் நலமாய் (வி)
பாசத்துடன் காட்சி தருவான் (அங்குச) பாசத்துடன் காட்சி தருவான்.
பந்தபாசத்தை நீக்கி நல்ஞானம் தருவான்
மோதகம் கையிலே ஏந்தி (நெய்) மோதகம் கையிலே ஏந்தி
மூஷிகத்தில் ஏறிமுன் வந்து நிற்பான் (வி)
எத்தனை பிறவி என்றாலும் நான்
சித்தத்தில் உன்னையே நினைத்திருந்து - உந்தன்
பக்கத்தில் இருக்க அருள்வாயே எந்தன்
கற்பக விநாயக பெருமானே (வி)

## 15. விநாயகனை நினைத்தால்

('ஜகதோதாரணா' போல் பாடவும்)

பல்லவி

விநாயகனை நினைத்தால் விக்னங்கள் விலகும் (வி)

அனுபல்லவி

ஆற்றங்கரையினிலும், அரசமரத்தடியிலும்
அழகுடன் அமர்ந்து கொண்டு, அகிலத்தைக் காத்திடுவான் (வி)

சரணம்

1. மஞ்சளில் பூஜித்தாலும், மண்ணிலே பூஜித்தாலும்,
கடல்நுரையில் பூஜித்தாலும் கருணையே செய்தருள்வான்.(வி)

2. நறுமலரால் அலங்கரித்து, நாமா சொல்லி அர்ச்சித்து,
அறுசுவை உணவு படைத்து அனைவரும்
வணங்குவோம் வாரீர். (வி)

3. அசுரர்க்கு அஞ்சி வந்த, அமரர்க்கு உதவி செய்தார்
அனுதினம் வணங்கும் பக்தருக்கனுக்கிரகம் செய்திடுவார். (வி)

## 16. காரணம் நீயே சொல்வாய்

('காரணம் கேட்டுவாடி' போல் போடவும்)

பல்லவி

காரணம் நீயே சொல்வாய் - கணேசா
யானையின் முகம் மட்டும் வைத்திருப்ப தேனென (கா)

அனுபல்லவி

வாரணம் பெரிய தென்றா, வாய் மூடி இருப்பதென்றா
உயர்ந்த குணமுள்ளதென்றா, கண்டுகளிப்பரென்றா (கா)

சரணம்

1. காட்டு விலங்கெனினும், நாட்டில் உலா வருமென்றா
கரமான தும்பிக்கை தூக்கி வாழ்த்தி அருளுமென்றா
பகைவருடன் போரிட்டதென்றா, பணிக்கும்
வேலைசெய்வதென்றா
பக்தர்களின் முறையீடுகேட்க பரவலான காதுள்ளதென்றா (கா)

2. அன்னைக்கு காவல் காத்து ஆனைமுகம் கொண்டனையோ
அசுரரை கொன்றொழிக்க அவதாரம் எடுத்தனையோ
ஓம்கார வடிவம் கொள்ள ஐங்கரம் கொண்டனையோ
நம்பிக்கை கொண்டவர்க்கு தும்பிக்கையால் துணை
புரியவென்றா (கா)

## 17. ஆலமரத்தின் கீழ்

('ஆடுபாம்பே' போல் பாடவும்)

வந்தருள் கணேசா வரம் தந்தருள் கணேசா (வ)

1. ஆலமரத்தின் கீழ் அமர்ந்து கொண்டாய்.
அன்பர்களின் ஆசையினால் கோவில் கொண்டாய்.
அரி, அரன் கோவிலுக்கு அருகினிலே,
அற்புதமாய் அமர்ந்து கொண்ட கற்பக விநாயகா. (வ)

2. சகலவேத நாயகன் நீ, சாமகானப் பிரியன் நீ,
சந்திரனை அணிந்தவன் நீ, சர்வ சக்தி வாய்ந்தவன் நீ,
ஆயுர்வேத மானவன் நீ, தனுர் வேத மானவன் நீ,
நந்திப்பிரியமானவன் நீ, நவநிதியாய் இருப்பவன் நீ. (வ)

3. வெண்ணிறத்தில் பூஜித்துன்னை வித்யை, ஞானம்பெற்றிடுவர்
செந்நிறத்தில் பூஜித்துன்னை செல்வம், கீர்த்தி பெற்றிடுவர்
மந்திரத்தால் பூஜித்துன்னை மங்களங்கள் பெற்றிடுவர்
யந்திரத்தில் பூஜித்துன்னை எல்லாப்பலனும் பெற்றிடுவர். (வ)

4. மனதால் நினைத்ததுமே மகிழ்ந்து அருளிடுவாய்.
மதியாதாரையும் மனம் மாற செய்திடுவாய்.
நீ விரும்பும் பக்தர் உனக்கு தொண்டு செய்திடுவர்
நின் அருளால் ஆனந்தம் கொண்டு மகிழ்ந்திடுவர்.

5. கதிரவன் சிறிதெனினும் தரும் ஒளி அதிக மன்றோ
கரிவைரம் சிறிதெனினும் பாரினிலே உயர்ந்ததன்றோ
கட்டிய கோவில் சிறிதெனினும் நீ காட்டும் சக்தி பெரிதன்றோ
உன்னை நம்பும் பக்தர்களின் உள்ளக்கருத்திதுவன்றோ.
உன்னை நம்பும் பக்தர்களின் உன்னதக்கருத்தன்றோ.
வந்தருள் கணேசா வரம் தந்தருள் கணேசா
உமா புத்திரனே வந்தருள் கணேசாஉடனேவரம்தந்தருள்கணேசா
சிவ பாலகனே வந்தருள்கணேசா சீக்கிரம் வரம் தந்தருள்கணேசா
முருகன் சோதரனே வந்தருள்கணேசா முன் நின்று வரம் தந்தருள்கணேசா

வல்லபையுடன் வந்தருள்கணேசா விரைவில் வரம் தந்தருள்கணேசா
சித்தி, புத்தியுடன் வந்தருள்கணேசா சீக்கிரம் வரம் தந்தருள்கணேசா
மூஷிகத்தில் வந்தருள்கணேசா முதலில் வரம் தந்தருள்கணேசா
எங்கள்முன் வந்தருள்கணேசா கேட்ட வரம் தந்தருள்கணேசா
வந்தருள்கணேசா வரம் தந்தருள் கணேசா ............................

## 18. மங்களம்

அகிலத்தை காத்தருளும் ஆனைமுகனுக்கு மங்களம்.
இன்னல்களை தீர்த்துவைக்கும் ஈசனுக்கு மங்களம்.
கவலைகளை போக்கிவிடும் கணபதிக்கு மங்களம்.
கலைகளை போதித்தருளும் கணநாதனுக்கு மங்களம்.
பாவங்களை போக்கி அருளும் பார்வதி புத்திரனுக்கு மங்களம்
பதினாறு செல்வம் தரும் பரமசிவ பாலனுக்கு மங்களம்.
மங்களங்கள் தந்தருளும் மகா கணபதிக்கு மங்களம்.
சொர்க்கம்போல வாழ்வளிக்கும் கற்பகவிநாயகனுக்கு மங்களம்
ஜயமங்களம் நித்ய சுபமங்களம்.

## 19. விநாயகர் கும்மிப்பாட்டு

('வெங்கடேச சுப்ரபாதம்' போல் சொல்லலாம்.)

1. காலைப்பொழுதிலே கணேசா காணவந்தேன் உன்னையே.
கவலைகள் தீர்த்திடுவாய் கணேசா கரம்கூப்பி வணங்கிடுவேன்.
2. ஆனந்தம்அளிக்கவோ கணேசா ஆனைமுகம் கொண்டனையோ.
முறையீடு கேட்பதற்கோ கணேசா முறக்காது கொண்டனையோ.
3. ஐங்கரம் உள்ளவனே கணேசா சங்கரன் புதல்வனே.
பாசம் உள்ளவனே கணேசா பார்வதி புத்திரனே.
4. மோதகம் உள்ளவனே கணேசா, மாதவன் மருமகனே,
மூஷிக வாகனனே கணேசா, முருகனின் சோதரனே.
5. வலம்புரி விநாயகனே கணேசா, வல்லபை நாயகனே.
கலசம் உள்ளவனே கணேசா, சித்திபுத்திமணாளனே.
6. அங்குசம் கையில்கொண்டால், மதயானை அடங்கிடுமே.
ஆனைமுகன் உன்கையில் கணேசா அங்குசம் அடங்கியதே.
7. வளைத்து தும்பிக்கையை கணேசா வக்ரதுண்டர் ஆனாய்.
அண்டத்தை வயிற்றில்வைத்து கணேசா லம்போதரன் ஆனாய்.
8. கனிக்காகப் போட்டியிட்டு கணேசா, கந்தன் ஆண்டி ஆனான்.
கஜமாக வந்துதவி தம்பிஸ்கந்தனின் மணம் முடித்தாய்.
9. அம்பாளின் புன்னகையும் கணேசா, ஈஸ்வரன் புன்னகையும்
கலந்து உருவானாய் கணேசா மகாகணபதியாய்.
10. விக்னயந்திரத்தைத் தகர்த்து பண்டாசுரனை வதம்செய்ய
தக்க சமயத்தில் தாய்க்குதவி வெற்றி பெறவைத்தாய்.

11. தந்தை தான் என்றாலும் கணேசா உன்னை மறந்ததனால்,
தேர் அச்சை முறியவைத்து கணேசா தடங்கல் செய்தனையே.

12. சிவன் உன்னை நினைந்ததுமே கணேசா, சீர்செய்து தேர்அச்சை
அசுரனுடன் போரிட்டு கணேசா திரிபுரனை கொல்லவைத்தாய்.

13. இராவணனை வென்றிடும்முன் கணேசா இராமனும் உன்னை நினைந்து
உப்பூரில் வழிபட்டு உயிர் சீதையை மீட்டுவந்தான்.

14. நாலாம்பிறையை கண்ட கிருஷ்ணர் பழிக்கு உள்ளானார்.
ஞாலமுதல்வனாம் உன்னை பூஜித்து நாடே புகழப்பெற்றார்.

15. அர்க்கப்பூவின் அர்ச்சனை எனில் அகமகிழ்பவனே
அர்க்க பகவான் சூரியனே வந்துன்னை வணங்குவதுபோல்

16. அழகின் அகந்தையால் கணேசா அவமதித்த சந்திரனை,
அறியச் செய்து தவற்றை கணேசா அணிந்து கொண்டாய் தலையில்.

17. கடல்நுரையால் கணபதி செய்து பூஜித்த பின்னரே,
பாற்கடலில் அமிர்தத்தை அமரர்க்கு கிடைக்க வைத்தாய்.

18. தூமாசுரனோ கணேசா தூமத்தால் கொல்லவந்தான்,
தூமத்தைவாயால் கக்கி கணேசா தூமாசுரனை கொன்றொழித்தாய்.

19. மலைப்பாம்பாய் வடிவெடுத்து கணேசா ஆசாசுரன் விழுங்கினான்,
அசுரனை அழிக்கவே கணேசா விசுவரூபமாய்வெடித்துவந்தாய்.

20. சிலம்பில் நுழைந்துன்னை நூபுரன் சிதைக்க விரும்பினான்,
சிலம்பை உதறியே கணேசா நூபுரனை கொன்றனையே.

21. ராவணன் கைலிங்கம் வாங்கி கணேசா தரணியில் வைத்தனையே,
அசுரனைக் கொன்றொழித்து கணேசா அமரர்க்குதவி செய்தாய்.

22. அனலனை விழுங்கியதால் வயிறு அனலாய் கொதிக்கவே,
வெம்மை தீர்க்கவே வெறும் அருகால் அர்ச்சித்தனர்.

23. தந்தத்தால் கஜமுகனை கொன்று நீ வாகன மாக்கினாய்,
தந்தம் உடைத்து வியாசர் சொல்ல பாரதம் எழுதினாய்.

24. காக்கை உருகொண்டு கணேசா காவிரி பாய வைத்தாய்,
அகத்திய குருமுனிக்கு கணேசா அநேக வரம் தந்தாய்.

25. அருகம்புல் மகிமையை கணேசா ஆசிரியைக்கு உணரவைத்தாய்,
ஆதிசேஷன் பக்திக்கிரங்கி ஆயிரம் தலைதந்தாய்.

26. ஔவையின் பூஜைகண்டு கணேசா கயிலையில் இடம்தந்தாய்,
நம்பிக்கை கொண்டவர்க்கு கணேசா தும்பிக்கையால்
துணைபுரிவாய்.

27. விஷ்ணுகை சக்கரத்தை கணேசா விருட்டென வாய்க்குள்
வைத்தாய்,
வியந்து தோப்புக்கரணம் கண்டு சிரித்து விழ வைத்தாய்.

28. தோப்புக்கரணம் போட்டோம் நாங்களும் சிரித்து நீ மகிழ்ந்திட,
கேட்கும் வரம் எங்களுக்கு தந்து நீ அருளிட.

29. அகத்தியனும் அசுரனும் உன்னை குட்ட வந்ததனால்
அனைவரும் உன்முன்னே பொட்டில் குட்டிக்கொள்கின்றனரோ.

30. தடுக்கும் விக்னத்தை நீ தகர்த்தெறிவாயென
தரையில் உடைப்போம் தேங்காய் உன்முன்னே சிதறுகாயென.

31. எழுதத்தொடங்குமுன் கணேசா உன் சுழியைப் போடுவர்
எந்தவேலைஎன்றாலும் கணேசா முன்வந்தனைஉன்னைசெய்வர்

32. அர்ச்சனைப்பூக்கள் வாசனையாய் எத்தனை இருந்தாலும்
அருகு ஒன்று இருந்தால் தான் அளிப்பேன் பலன் என்றாய்.

33. மஞ்சளில் நினைத்துன்னை பூஜித்தாலும் வந்து வரம் தருவாய்.
மரத்தடி என்றாலும் கணேசா மகிழ்வுடன் வீற்றிருப்பாய்.

34. பூதத்தலைவனே கணேசா பிரணவ ஸ்வரூபனே
ஞாலமுதல்வனே கணேசா ஞான ஸ்வரூபனே.

35. சேயின் மகிழ்ச்சி கண்டு கணேசா தாய் தந்தை மகிழ்வது போல்
உன்னை பூஜித்து சிவ, பார்வதி அருளையும் பெறுவோம்.

36. கண்டுன்னை பாடவந்தோம் எங்கள் கற்பக விநாயகனே
கணமும் உன்னை மறவாதிருக்க இன்பமே தந்திடுவாய்.

37. சப்தஸ்வரங்களால் இசை அமைத்து பாடவந்தோமே.
சரணம், சரணம் சரணமென்றுன்னை சரணடைந்தோமே
கணேசா சரணடைந்தோமே.

## 20. ஆனந்தம் கொண்டேன்

('ஆனந்த ஊஞ்சல்' போல் பாடவும்)

ஆனந்தம் கொண்டேன் மனதில்
அதிகாலையில் எழுந்ததும் யானைமுகனைக் கண்டு (ஆ)

1. அங்குச, பாசத்துடன், கொம்பு, கொழக்கட்டை ஏந்தும்
சங்கரன் புதல்வன் அவனின் தரிசனம் கண்டதும் நான். (ஆ)

2. மயிலுடன், எலியும், சிங்க வாகனம் உடையோன்
கயிலையில் கனிக்கான போட்டியில் வென்றோனைக்கண்டு(ஆ)

3. சந்திரனை தலையில் தரித்தோன், சர்ப்பத்தை இடையில்
அணிந்தோன்
சங்கடம் தீர்க்கும் அவனின் சன்னதி கண்டதும் நான். (ஆ)

4. நெஞ்சத்திலே கோவில் கட்டி, குஞ்சரனை குடிவைத்து
தஞ்சமடைந்தால் அவன்பாதம் அஞ்சேலெனஅபயமளிப்பான் (ஆ)

## 21. நல்லது செய்தாரே

('லாலிஆடினாள்' போல் பாடவும்)

நல்லது செய்தாரே விநாயகன் நல்லது செய்தாரே,
நம்பிவந்த பக்தருக்கு நல்லது செய்தாரே.
தும்பிக்கையால் துணைபுரிந்து, துன்பத்தை போக்கிடுவார். (நல்)

1. அகத்தியனின் கமண்டலத்தில், அடைபட்ட காவிரியை,
அகிலத்தில் பாயவைக்க, காக்கை உருவில் கவிழ்த்துவிட்டார் (நல்)

2. அசுரன் விபீஷணனின், அரங்கனை கைப்பற்றி,
அவனியில் வைத்ததை, ஸ்ரீரங்கத்தை நமக்கு தந்தார். (நல்)

3. அசுரன் ராவணன் கையிலிருந்த, ஆத்மலிங்கத்தை தரையில்
வைத்து,
அமரர்க்குதவி செய்து, அழகிய கோகர்ணம் தலத்தை தந்தார். (நல்)

4. ஔவையின் பூஜையில் அகமகிழ்ந்து, யோகத்தைசொல்லித்தந்து
தமிழில் தொண்டு செய்ய வைத்து, தரணிக்கு நல்ல நீதி நூல்
தந்தார். (நல்)

5. நம்பியின் மேல் அன்பு கொண்டவனை, நம்பி வந்த சோழனுக்கு
தில்லையம்பதியின் அறையில் தேவாரத்தைக்காட்டித் தந்தார்.
(நல்)

6. வேழமுகன் கொம்பொடித்து வேதவியாசரின் பாரதத்தை
வேகமாக எழுதிதந்து வேதம் ஐந்தாக ஐங்கரன் தந்தான் (நல்)

7. அன்புடனே பக்திகொண்டு, அனுதினம் வணங்கும் பக்தருக்கு
அகத்தினிலே அமைதி தந்து, ஆனந்தமாய் வாழ செய்வார்.
(நல்)

## 22. 'வந்து அமர்ந்தாய்'

இந்தி பஜனை (आना सुन्दर श्याम्) போல் பாடவும்

வந்து அமர்ந்தாய் கணேசா சோனாரியில்
வந்து அமர்ந்தாய் கணேசா. (வந்து)

1. வந்து அமர்ந்தாய் தந்தையின் அருகினில்
பக்தர்கள் ஆசைக்கிணங்கி - பரமதயாளா
பக்தர்கள் ஆசைக்கிணங்கி. (வந்து)

2. அன்புடன் அழைத்ததும் ஆனந்தம் அடைந்து
அனுக்கிரகம் செய்தருள்வாய் அகில முதல்வா
அனுக்கிரகம் செய்தருள்வாய். (வந்து)

3. அஞ்சிவந்த அமரர்க்கு தஞ்சமளித்தவனே
நெஞ்சத்தில் நிம்மதிதா - எந்தனுக்கு
நெஞ்சத்தில் நிம்மதிதா. (வந்து)

4. நெற்றிப் பொட்டில் குட்டிக்கொண்டு
பற்றினோமே உந்தன்பாதம் கற்பகவிநாயகளே
கருணை செய்வாய்

வந்து அமர்ந்தாய் கணேசா சோனாரியில்
வந்து அமர்ந்தாய் கணேசா ஜம்ஷெட்பூரில்
வந்து அமர்ந்தாய் கணேசா ஜார்கண்ட்ஸ்டேட்டில்
வந்து அமர்ந்தாய் கணேசா இந்தியதேசத்தில்
வந்து அமர்ந்தாய் கணேசா ஆசியா கண்டத்தில்
வந்து அமர்ந்தாய் கணேசா இத்தரணி தன்னிலே
வந்து அமர்ந்தாய் கணேசா பக்தர் நெஞ்சத்தில்
வந்து அமர்ந்தாய் கணேசா கற்பக விநாயகனாய்
வந்து அமர்ந்தாய் கணேசா கேட்டவரம்
தந்துஅருள்வாய் கணேசா.

## 23. கணபதி உன்னை நான் பணிந்தேன்

('காற்றினிலே வரும் கீதம்' போல் பாடவும்)

பல்லவி

கணபதி உன்னைநான் பணிந்தேன்
மனதிலே மகிழ்வுநீ தருவாய்
அருள்வாய் கண்கண்ட தெய்வம் நீயே. (கண)

அனுபல்லவி

காலையும், மாலையும் கண்அயர்வேளையும்
கனவிலும் உன்னை நான் காண்பேன்
கைகள் வேலை செய்தாலும் மனதில்
உன்னையே நினைத்திருப்பேன் நினைத்திருப்பேன்
உன்னையே நினைப்பேன் உன்புகழ் பாடுவேன்
கணபதி என்னை நீ காப்பாய். (கண)

சரணம்

1. அசுரரின் அகந்தையை அடக்கிடவேஎன,
ஆனைமுகம் தனைகொண்டாய்.
துதிக்கும் அன்பர்களின் துன்பத்தை போக்க,
தும்பிக்கை நீ கொண்டாய், துணைபுரிந்தாய்,
தும்பிக்கை கொண்டாய், துணைபுரிந்தாயே,
நம்பி வந்தேனே நானும். (கணபதி)

2. தந்தைக்கும், தாய்க்கும் உதவி செய்தேநீ,
அசுரரை கொல்ல வைத்தாயே.
யானை உருகொண்டு, அச்சுறுத்தி வள்ளியை,
கந்தனின் மணம்முடித்தாய், மகிழ வைத்தாய்.
மணம் முடித்தாயே மகிழவைத்தாயே
சொந்தமாய் வந்தேன் நானும். (கண)

## 24. தேவர்கள் வணங்கிடும்

('ரகுபதி ராகவ" போல் பாடவும்)

தேவர்கள் வணங்கிடும் சுமுகரவர்.
ரிஷிகள் வணங்கும் ஏகதந்தர்.
கந்தவர் வணங்கிடும் கபிலரவர்.
சித்தர்கள் வணங்கும் கஜகர்ணர்.
மானிடர் வணங்கிடும் லம்போதரர்.
மிருகங்கள் வணங்கும் விகடரவர்.
பறவைகள் வணங்கிடும் விக்னராஜர்.
கிரகங்கள் வணங்கும் கணநாயகர்.
திக்பாலர்கள் வணங்கிடும் தூமகேது.
நதி,தீர்த்தம் வணங்கும் கணாத்யட்சர்.
பயிர்கள் வணங்கிடும் பாலசந்திரர்.
பிறபிராணிகள் வணங்கும் கஜானனர்.
பன்னிரெண்டு நாமம் சொல்லி வணங்கிடுவோம்.
பாதம் பற்றி கணேசரை சரணடைவோம். - 2 தடவை

## 25. 'கணபதியே, கணபதியே'

('காமாக்ஷி காமாக்ஷி காஞ்சி நகரில் வாழும் காமாக்ஷி' போல்)

கணபதியே, கணபதியே
கருணை செய்தருளும் கணபதியே.
சிந்தூரனை விரட்டி உமையை காத்த கணபதியே
சிங்கத்தின் மேல் காட்சி தந்தாய் கணபதியே.
கணராஜனை மழுவால் கொன்று கணபதியே,
கபிலமுனியின் சிந்தாமணி மீட்டாய் கணபதியே.
மயிலை வாகனம் கொண்டு கணபதியே,
கமலாசுரனை சங்கரித்தாய் கணபதியே.
உமையின் சாபம் பெற்ற விஷ்ணுவிற்கு,
சாபவிமோசனம் தந்தாய் கணபதியே.
இந்திரனின் மமதை அடக்க கணபதியே,
விசுவ ரூபமெடுத்தாய் நீ கணபதியே.
முருகன் வணங்கியதால் கணபதியே,
சூரனை வெல்லச் செய்தாய் கணபதியே.
நளன் சதுர்த்திவிரதம் இருந்து கணபதியே,
நல்லவிதமாய் சிவஞானம் பெற்றான் கணபதியே.
சிறுவனாய் வந்து நீ கணபதியே,
சிவலிங்கத்தை தரையில் வைத்தாய் கணபதியே.
வலம்வந்தேன் ஆலயத்தை கணபதியே,
வாரிசு நல்லதாய் தந்திடுவாய் கணபதியே.
சிதறுகாய் உடைத் தேன் கணபதியே,
சிதறிட விக்னங்கள் அருள்வாய் கணபதியே.
நெஞ்சமுருகி பாடி வந்தேன் கணபதியே,
அஞ்சேலென அபயமளிப்பாய் கணபதியே.
அற்பப்பிறப்பை தவிர்ப்பாய் கணபதியே
பொற்பாதம் பணிந்தேன் நான்கற்பக கணபதியே.

## 26. 'வினைதீர்க்க வருவாய்'

('விளையாட இது நேரமா' ராகத்தில் பாடவும்)

பல்லவி

வினைதீர்க்க வருவாய் அப்பா - கணேசா
வினைதீர்க்க வருவாய் அப்பா முன்
வினையாலே படும்பாட்டை விழியாலே களைந்தருளி (வினை)

அனுபல்லவி

யானைமுகத்தழகா, பானைவயிற்றழகா
பார்வதியின்மைந்தா, பாசத்துடன் வந்தென் (வினை

சரணம்

அங்குசத்தால் மதயானை அடங்கிடும்
பாசத்தினால் சொந்தபந்தங்கள் சேர்ந்திடும்
தும்பிக்கைநீட்டியே துன்பத்தை போக்கிடுவாய்
நம்பிவந்த என்னை நலம்பெற வாழ்த்திடுவாய் (வினை)

## 27. 'பெயருக்கேற்ற பிள்ளையார் நாமா'

அகிலம் படைக்க பிரமன் தொழுத **சிருஷ்டி கணபதியே** போற்றி
**ஆ**னந்த முகமுடைய **சுமுகனே** போற்றி
இந்திரனின் மமதை அடக்கிய மகோற்கட விநாயகரே போற்றி
**ஈ**சனுடன் நடனமாடிய **நிருத்ய கணபதியே** போற்றி
**உ**த்திராடத்தின் அதிதேவதையான **விநாயகனே** போற்றி
**ஊ**று செய்த காலரூபியை வென்ற **விக்னராஜ விநாயகனே** போற்றி
எருக்கம் மலரை விரும்பும் **அர்க்க கணபதியே** போற்றி
ஏறிமூஷிகத்தில் பவனி வரும் **மூஷிக வாகனனே** போற்றி
ஐந்து முகம் கொண்ட **ஹேரம்ப கணபதியே** போற்றி
ஒரு தந்தம் உடைத்ததால் **ஏகதந்தரே** போற்றி
ஓங்கார வடிவம் கொண்ட **ஐங்கரனே** போற்றி
ஔவைக்கு கயிலையில் இடம் தந்த **பஞ்சாட்சர கணபதியே** போற்றி
கபிலமுனியின் சிந்தாமணியை மீட்ட **சிந்தாமணி விநாயகனே** போற்றி
கார்த்தவீரியனுக்கு 2 கால்களையும், 1000 கைகளையும் தந்த
**பிரவாள விநாயகரே** போற்றி
கிரௌஞ்சனின் சாபம் தீர்க்க வந்த **விக்ன விநாயகனே** போற்றி
கீழிருக்கும் அருகின் பெருமையை ஆசிரியைக்குணர வைத்த
**மூலாதார கணபதியே** போற்றி
குபேரனுக்கு சங்கநிதி, பத்மநிதி கிடைக்கச் செய்த
**செல்வ கணபதியே** போற்றி
கூடாசுரன் கக்கிய விஷநீரை அமிர்தமாக்கிய **கருணை கணபதியே**
போற்றி
கெட்ட அசுரர்களிடமிருந்து அமரரைகாத்த **தேவாதிதேவனே**போற்றி
கேட்ட வரம் விரைவில் தந்தருளும் **க்ஷிப்ரபிரசாத கணபதியே** போற்றி
கைகளில் சூலம், பாசம்ஏந்தி **சிவசக்திஸ்வரூபமகாகணபதியே** போற்றி
கொட்டாவியில் வந்த சிந்தூரனைக் கொன்ற **கஜானனரே** போற்றி
கோடி சூரிய, சந்திர ஒளி பொருந்திய **தேஜோ** கணபதியே போற்றி

கௌரியின் தேஜஸ்ஸில் ஆவிர்பவித்த **நரமுககணபதியே** போற்றி
பக்கத்தில் வல்லபை உடைய **வல்லப விநாயகனே** போற்றி
அங்காரகன், தொழுத **சங்கடஹரணே** போற்றி
சக்கரம், தாமரையை கைகளிலேந்தி **விஷ்ணு-லக்ஷ்மி ஸ்வரூப மகாகணபதியே** போற்றி
சாமகானப் பிரியனான **கானகணபதியே** போற்றி
சிங்க வாகனம் கொண்ட **சிங்ககணபதியே** போற்றி
சீற்றம்கொண்ட அன்னையின் கோபம்தணித்த**செல்லகணபதியே**போற்றி
சுக்லபட்ச சதுர்த்திகண்ட கிருஷ்ணர் பூஜித்த **விஷ்ணுப்பிரிய கணபதியே** போற்றி
சூலாயுதம் சிவனிடமிருந்து பெற்று கமலாசுரனை அழித்த **மயூரேச கணபதியே** போற்றி
செக்கச்சிவந்த, நான்கு கரம்உடைய **உச்சிஷ்ட கணபதியே**போற்றி
சேஷாத்ரி, மது, கைடபர்களை வெல்லும் முன்வணங்கிய **சித்திகணபதியே** போற்றி
சையவரைச்சாரலில் அகத்தியரின் கமண்டலத்தைக்கவிழ்த்து காவிரி பாயவைத்த **விகடனே** போற்றி
சொன்னதால் ஜனகர் 'அகமேபிரம்மம்' என அவரின் அகங்காரம் நீக்கிய ஞானப்பிள்ளையாரே போற்றி
சோடசாக்ஷரம் தாய்க்குள்ளது போல் சோடச நாமம் கொண்ட **சோடசகணபதியே** போற்றி
சௌண்டீ என்ற சக்தியால் அலங்கரிக்கப்படும் **சக்தி கணபதியே** போற்றி
உச்சரித்ததும் நாமம் தக்கதருணத்தில் வந்து காக்கும் **தருணகணபதியே** போற்றி
ஞாலமென தாய், தந்தையை வலம்வந்த **விநாயகனே** போற்றி
மஞ்சள் நிறமும், ஆறுகைகளும் கொண்ட **ஊர்த்துவகணபதியே** போற்றி
கடல் நுரையால் அமரர்பூஜித்த **திருவலம்சுழி விநாயகனே**போற்றி
டாமரரூபமான **த்ரையாக்ஷர கணபதியே** போற்றி
அடியார் புருசுண்டியை அவமானம் செய்த வன்னி-மந்தாரையை மரங்களாக்கிய **வன்னிமந்தாரை கணபதியே** போற்றி
பட்டீஸ்வரன் கோவிலுக்கு செல்லாது பாரமாகி தனிக்கோவில் கொண்ட **ஈச்சனாரி விநாயகரே** போற்றி
எடுத்த வேலையைத் தொடங்கும் முன் வணங்கப்படும் **அகில முதல்வனே** போற்றி
இடையூறுகளை அகற்றி வெற்றி கிடைக்கச் செய்யும் **வெற்றி விநாயகனே** போற்றி

பட்சியாக வந்த கிருஷ்ணாசுரனை பாசத்தால் கொன்ற
**வீரகணபதியே** போற்றி
வணங்கிய இந்திரனுக்கு அமிர்தம்தந்த **ஸ்வேத விநாயகரே** போற்றி
அண்டம் தாங்கிய வயிற்றை உடைய **லம்போதரனே** போற்றி
தகிக்கும் அனலாசுரனை விழுங்கிய **மகோதரனே** போற்றி
தாமாட்சனை கொன்று காசிராஜனைகாத்த **ஆபத்து காத்த விநாயகனே** போற்றி
திரிகாலம் உணர்ந்த சோதிட சிறுவனாக காசிக்கு சென்ற
**உடுண்டிவிநாயகரே** போற்றி
தீயில் விழப்போன லாபனை தடுத்து நிறுத்திய **கணபதி அப்பனே** போற்றி
தூங்காநதியை பல்லால் தூக்கிய **வாரண முகத்தோனே** போற்றி
தூமாசுரனை தூமத்தால் கொன்ற **தூமகேதுவே** போற்றி
தெய்வம் பிறவும் தொழும் **ஜ்யேஷ்டராஜனே** போற்றி
தேரச்சை சீர்செய்து திரபுரனை கொல்ல தந்தைக்குதவிய
**அச்சிறுத்த விநாயகனே** போற்றி
சீதையைத் தேடுமுன் ராமர் தொழுத **உப்பூர்கணபதியே** போற்றி
தொங்கும் கையான நீண்டு வளைந்த துதிக்கை உடைய
**வக்ரதுண்டரே** போற்றி
தோஷம் நீங்க சிவலிங்கப்பிரதிஷ்டை செய்த **கபிலரே** போற்றி
அத்திரி மகரிஷிக்கு இருபுத்திரரைத் தந்த **சந்தான கணபதியே** போற்றி
நரசிம்மமாகவந்த விஷ்ணுவை சாந்தம்செய்த **விகட விநாயகனே**போற்றி
நாரி உருவமும், வேழமுகமும் கொண்ட **கணேசினியே** போற்றி
நிழலைப்பிடிக்க வந்த சாயாசுரனை பார்வையாலேயே எரித்துக்
கொன்ற **காலாக்கினிஸ்வரூப கணபதியே** போற்றி
நீர், நிலம், தீ, வாயு, ஆகாயம் என பஞ்சபூதங்களும் அடக்கிய
**பேழை வயிற்றோனே** போற்றி
நுதலில் பிறைச்சந்திரனை அணிந்து சந்திரனின் சாபம் குறைத்த
**பாலசந்திரனே** போற்றி

நூபுரம் அணிந்த காலினால் நூபுராசுரனைக்கொன்ற
**பாலவிநாயகனே** போற்றி

நெற்கதிரும், கதையும் கைகளிலேந்தி **பூமாதேவி, வராகமேகா் ஸ்வரூபமான மகா கணபதியே** போற்றி
நேத்திரங்கள் மூன்று உடைய வரும், நேத்திரத்தை பக்தருக்கு
தந்தவருமான **நேத்திர கணபதியே** போற்றி
நைவேத்யம் நம்பிதந்தது உண்டு **திருமறைகாட்டிய விநாயகனே** போற்றி

நொந்துவந்தவர்களின் மனசங்கடம் தீர்த்தருளும் சங்கடவிமோசன கணபதியே போற்றி

நோன்பு சதுர்த்தி விரதம் பார்வதி இருந்ததால் சிவனை மணக்கச்செய்த கணேசரே போற்றி

செந்நாய் உருவில் வந்த விருகாசுரனை அங்குசத்தால் கொன்ற அங்குச பாசகணபதியே போற்றி

பக்தியுடன் பணிந்த இராமருக்கு அருளிய பிரணவ கணபதியே போற்றி.

பாஞ்சஜன்யத்தை சிவகணத்திடமிருந்து மீட்ட அத்திகிரிகணபதியே போற்றி.

பிரமன் புத்திரிகளை மணந்த சித்தி, புத்தி விநாயகனே போற்றி.

பீதாம்பரம் அணிந்த ஏகாட்சர கணபதியே போற்றி.

புவி அரசன் கார்த்த வீரியனை பூண்டுடன் அழிக்க பரசுராமர் பூஜித்த சடாக்ஷர கணபதியே போற்றி.

பூதங்களின் தலைவனான கணாத்யஷனே போற்றி.

பெருங்கடல் நீரை தும்பிக்கையால் வற்றச்செய்த பிரளயம் காத்த விநாயகரே போற்றி.

பேரின்ப முக்தியைமறுமையில் தரும் வரசித்திகணபதியேபோற்றி.

பையனாக வந்து கேட்டு கரும்பை கரிக்கச் செய்த கரும்பாயிரம் பிள்ளையாரே போற்றி.

பொள்ளப்படாமல் உளியால் சுயம்புவாய் வந்த பொள்ளாப் பிள்ளையாரே போற்றி.

போட்டியாய் தம்பிக்கு, மலைமேல் அமர்ந்த மலைக்கோட்டை உச்சிப் பிள்ளையாரே போற்றி.

பௌத்தர்கள் கொண்டாடும் சித்தநாதா போற்றி.

அப்பனுக்கு தன் ஆயிரம் நாமம் சொன்ன ருத்ரப்பிரிய கணபதியே போற்றி.

மகாபலியை வெல்ல திருமால்பூஜித்த வாமன கணபதியேபோற்றி.

மாங்கனியைப் போட்டியில் வென்ற விஜய கணபதியே போற்றி.

அமிர்தம் அமரர்க்கு கிடைக்கச் செய்த அமிர்தகலச விநாயகனே போற்றி.

மீஞ்சூராக அசுரனை மாற்றிய கஜராஜனே போற்றி.

முறம் போன்ற காதுகளுடைய சூர்ப்பகர்ணனே போற்றி.

மூன்று சக்தியாய் இருக்கும் ஆதிவிநாயகனே போற்றி

மெய்யை உணரவைத்து அமரர்க்கு அமிர்தம் கிடைக்கச்செய்த கள்ளவாரணப் பிள்ளையாரே போற்றி

மேற்குதிசை நோக்கி சோனாரியில் அமர்ந்திருக்கும் கற்பக விநாயகரே போற்றி

உமையவளின் மனமகிழ் உமா புத்திரனே போற்றி
மொண்டு தண்ணீருடன் பதினோறுவகை அபிஷேகம் ஏற்கும்
ஏகாதசருத்ராபிஷேக கணபதியே போற்றி
மோதகப்பிரியனான மோதக ஹஸ்த கணபதியே போற்றி
மௌனாகாரமான 'உ' என உன் சுழிபோட்டு தொடங்கும்
பிள்ளையாரே போற்றி
சம்பந்தருக்கு சிவன் கோவில் செல்ல வழிகாட்டிய விநாயகரே போற்றி
யமனை உதைத்து முனிகுமாரர்களை மீட்ட பால கணபதியே போற்றி
யானையாக வந்த ஆவிசனை மத்தகம் பிளந்த
யானைமுகத்தோனே போற்றி
வயிற்றினுள் வாதாபியை ஜீரணிக்க அகத்தியனுக்கு அருளிய
வாதாபிகணபதியே போற்றி
யுகங்கள் தோறும் அவதாரமெடுத்து அடியார்களுக்கு
துணை வந்த வினாயகனே போற்றி
மயூரேச விநாயகர் ஆலயத்தில் பார்வதிக்கு காட்சி தந்த
த்ரிமுக கணபதியே போற்றி
யேந்தியதால் தந்தை, கங்கையை தலையில் கங்கையையும்
அன்னையாகக் கொண்ட த்வைமாதுரனே போற்றி
யௌவன பருவத்தில் ஔவைக்கு முதுமையையும், இளமையில்
தம்பிக்கு துறவையும் தந்துவிளையாடிய பிரம்மச்சாரியே போற்றி
தாய், தந்தையின் புன்சிரிப்பில் தோன்றி பண்டாசுரனைவதம் செய்ய
தாய்க்குதவிய கணேஸ்வரனே போற்றி
ரத்னசிம்மாசனத்தில் வீற்றிருக்கும் ராஜகணபதியே போற்றி
ராவணன் கைலிங்கம் வாங்கி தரையில் வைத்து
குட்டுப்பட்ட விநாயகரே போற்றி
அரி, இரண்யகசிபுவை வெல்லுமுன் வணங்கிய வன்னி விநாயகனே
போற்றி
மரீசிமுனியின் மகளை மணந்த வல்லப கணபதியே போற்றி
தாருகனை வெல்லும் முன் முருகன் வணங்கிய லக்க விநாயகரே
போற்றி

குரூராசுரனை வேதங்களை நாயாக்கி கொன்ற சக்தி விநாயகனே
போற்றி

இரெண்டு முகமுடைய த்விமுக கணபதியே போற்றி
வரேண்யனுக்கு மகனாய் பிறந்த தெய்வ குழந்தையே போற்றி
அரைஞாணாக ஆதிசேஷனை அணிந்து, சாபவிமோசனம் அளித்த
நாகாபரண கணபதியே போற்றி
ரௌத்ரமான வராகமூர்த்தியாய் வந்த விஷ்ணுவின் பல்லைப்
பிடுங்கிய வராஹரதனனே போற்றி

கர்வம் அசுரர்களுடையதை அடக்கிய **கஜமுகனே** போற்றி
லங்கைக்கு அணைகட்ட ராமருக்கு யோசனை சொன்ன
**தொண்டி கணபதியே** போற்றி
லாபனை மகனாகப்பெற்ற **மயூரேச விநாயகனே** போற்றி
நலிவுற்ற அக்னியை விசிறிக்காத்த **கஜகர்ணரே** போற்றி
மலைப்பாம்பாய் ஆசாசுரன் விழுங்கியதும் விஸ்வரூபமெடுத்து வந்த
**ஹரித்ரா கணபதியே** போற்றி
நீலோத்பலம், கரும்புவில் கைகளிலேந்தி
**ரதி, மன்மதஸ்வரூப** மகா **கணபதியே** போற்றி
கல்யாண குணம் கொண்ட **கணநாதனே** போற்றி
வரி செலுத்தாததால் ஜாதிக்காயை கடுக்காயாக மாற்றிய
**கடுக்காய்ப் பிள்ளையாரே** போற்றி
வாய்க்குள் விஷ்ணுகை சக்கரத்தை வைத்த
**விகட சக்கர விநாயகனே** போற்றி
விபீஷணனின் அரங்கனை அவனியில்வைத்து ஸ்ரீரங்கம் தந்த
**பாலவிநாயகனே** போற்றி
வீணையில் வல்லவர்களால்துதிக்கப்படும் **நாதஸ்வரூபனே** போற்றி
வெள்ளைக்காரப் பிள்ளையார் என செல்லமாக அழைக்கப்படும்
**மணற்குள விநாயகரே** போற்றி
வேதமான பாரதத்தை வியாசர் சொல்ல, வேகமாக எழுதித்தந்த
**வேதநாயகனே** போற்றி
வைணவ தலங்களிலுள்ள **தும்பிக்கையாழ்வாரே** போற்றி
அவ்வைக்கு யோகம் சொல்லித் தந்த **யோக கணபதியே** போற்றி
வேழமாக வந்து வேலவனின் மணம்முடித்த **ஸ்கந்தபூர்வஜனே** போற்றி
அழிக்க கமலாசுரனை மயில் மீது ஆரோகணித்த **மாமல்லனே** போற்றி
எழுத தந்தமும் மாதுளையும், கைகளிலேந்தி **வாணி** நான்முக
**ஸ்வரூப மகாகணபதியே** போற்றி
மழை, வெயில் பாராது வெளியே அமர்ந்திருக்கும்
**வெய்யில் உகந்த விநாயகரே** போற்றி
வளமான வாழ்வுடன், சகல மங்களம் தரும் **மங்கள விநாயகனே**
போற்றி
களிறுடன், பிடியும்கலந்து உருவான **சிவசக்தி கணபதியே** போற்றி
வளைந்த தும்பிக்கை நுனியில் ரத்னகலசம் ஏந்திய
**ஓங்கார கணபதியே** போற்றி
அள்ளி நெல்லை அளந்து குருணியில் அர்ப்பணிப்பதை ஏற்கும்
**முக்குருணிப் பிள்ளையாரே** போற்றி
பிறவிக்கடலை கடக்கச்செய்யும் **கற்பகக்களிரே** போற்றி
அறியாமையை அகற்றி மெய்யறிவுகாட்டும் **ப்ருகஸ்பதியே** போற்றி

குறுக்கிட்டதால் காவிரி ஓலமிட்டு சுந்தரருக்கு வழிவிடச் செய்த
**ஓலமிட்ட விநாயகரே** போற்றி

**குறை**ந்த நிவேதனத்தில் திருப்தி கொள்ளும் **குழந்தை தெய்வமே** போற்றி

மு**ற்**கல முனிவர்போல் தக்கனுக்கு காட்சி அளித்த
**வரம் தந்த விநாயகனே** போற்றி

**கானன்**, கிருதாந்தன் ஆளிகளாக வந்தபோது தும்பிக்கையை
இழுத்துக்கொன்ற **தும்பிக்கையானே** போற்றி

**மனித**, தேவ, பூத, மிருக உருவம் கொண்ட
**அனைத்து ரூப கணபதியே** போற்றி

**தனுர்**, ஆயுரென அனைத்து வேதமான **வேதமுதல்வனே** போற்றி

**அனை**வரின் எளிய பூஜை ஏற்று பேரருள் தரும்
**வாரண முகத்து வள்ளலே** போற்றி

பன்**னி**ருகை வேலவனுக்கு குருவாய் உபதேசம் செய்த
**குமார குருவே** போற்றி

அருகம்புல்லால் அர்ச்சிப்பவருக்கு ராகுதோஷம் நீக்கும்
**தருண கணபதியே** போற்றி

வன்னி இலையால் அர்ச்சிப்பவருக்கு சனிதோஷம் நீக்கும்
**வன்னி கணபதியே** போற்றி

தும்பைப்பூவால் அர்ச்சனை செய்தால் துன்பம் போக்கும்
**சம்புசக்தி கணபதியே** போற்றி

மந்தாரைப்பூவால் அர்ச்சனை செய்தால் கேது தோஷம் போக்கும்
**நந்திப்பிரிய கணபதியே** போற்றி

எருக்கம் மலரால் அர்ச்சித்தால் தரித்திரம் போக்கும்
**தனதான்ய பதியே** போற்றி

காப்பாய் ஜனன மரண பயமின்றி தோப்புக்கரணம் போட்டேன்
**தொப்பை கணபதியே** போற்றி

சிதற விக்னங்கள் அருளிடவே சிதறுகாய் உடைத்தேன்
**சித்திப்பிரிய கணபதியே** போற்றி

நெற்றிப் பொட்டில் குட்டிக்கொண்டு பற்றினேன்
**கற்பகக்கொடி ஏந்திய கணபதியே** போற்றி

ஒரு அக்ஷரத்தில் இருப்பவரே போற்றி - एकाक्षराधाराय

இரண்டு அன்னை உள்ளவரே போற்றி - द्वैमातुराय

மூன்று கண்கள் கொண்டவரே போற்றி - त्रिलोचनाय

நான்கு தந்தங்கள் உடையவரே போற்றி - चतुर्दन्ताय

ஐந்து வர்ணங்கள் உடையவரே போற்றி - पञ्चवर्णाय

ஆறு சுவைகளுக்கும் ஆதாரமானவரே போற்றி - षड्रसाश्रमाय

ஏழு ஸ்வரங்களுக்கும் பற்றுக் கோடாக இருப்பவரே போற்றி

– सप्त सवाराश्रमाय

எட்டு (அஷ்ட) ஐஸ்வர்யங்களையும் அளிப்பவரே போற்றி

– अष्टैश्वर्यप्रदायकाय

ஒன்பது நாகங்களை அணிகலனாக பூண்டவரே போற்றி

– नवनाग विभूषणाय

பத்து திக்குகளின் தலைவர்களால் வணங்கப்படுபவரே போற்றி

– दरादिवपतिवन्दिताय

போற்றி போற்றி துர்கா கணபதியே போற்றி
போற்றி போற்றி வித்யா கணபதியே போற்றி
போற்றி போற்றி லக்ஷ்மி கணபதியே போற்றி
போற்றி போற்றி பாரதீ ஸுந்தரி நாதனே போற்றி
போற்றி போற்றி கற்பக கணபதியே போற்றி போற்றி.

## 28. நான் ஒரு விளையாட்டு பொம்மையா? போல் பாடலாம்

பல்லவி

கணங்களின் தலைவனே கணபதி
தன, தான்யம் தந்திடும் தனபதி அவன் (கண)

அனுபல்லவி

கணங்கள் அமரர்க்கும், அசுர கணங்களுக்கும்
பூத கணங்களுக்கும் அதிபதி அவன் (கண)

சரணம் 1

வாக்குவளம் தரும் வாசஸ்பதி
செல்வாக்கு தந்திடும் நிதிபதி.
அகிலத்து ஜீவனை காக்கும் பசுபதி அவன்
அனைத்து தேவருமான மகா கணபதி. (கண)

சரணம் 2

அன்னையிடம் தோன்றிய நரமுககணபதி
தந்தை உயிர்ப்பித்த யானைமுக கணபதி
சிங்கத்தின் மேல் காட்சிதரும் சித்தி புத்தி கணபதி
ஸ்ரீரங்கம் நமக்குத் தந்த பாலகணபதி
வல்லமை தந்திடுவான் வல்லபகணபதி
வரங்களை தந்தருளும் கற்பக கணபதி

சங்கடங்கள் தீர்த்தருளும் சங்கடஹரகணபதி
ஓங்கார வடிவம் கொண்ட ஓங்கார கணபதி
சங்கரனின் சந்ததியான உமாபுத்ர கணபதி (கண)

## 29. 'திருமுருகா என்று ஒரு தரம்சொன்னால்' போல் பாடலாம்

பல்லவி

குஞ்சர முகத்தோனை கூவி அழைத்தால்
அஞ்சேலென சொல்லி அபயமளிப்பான். (குஞ்)

அனுபல்லவி

சஞ்சலமென்று தஞ்ச மடைந்தோரின்
சங்கடம் தீர்ப்பான் சங்கடஹரனே (குஞ்)

சரணம் 1

தொந்தி பெரிதாக்கி அண்டத்தை காத்தான்
தந்தின் முகம் கொண்டு அசுரரை அழித்தான்
இந்திரனின் தோட்டத்தில் காவிரிபாயவைத்தான்
சந்திரனின் சாபம் குறைத்து ஒளிவீசச் செய்தான் (குஞ்)

சரணம் 2

வேதத்தை மீட்டுத்தந்த மயூரேசவிநாயகன்
வேலனுக்கு மயில்தந்த இலக்கவிநாயகன்
வேதியனாய் ஞானமளித்த ஞான விநாயகன்.
வேண்டும் வரம் தரும் கற்பக விநாயகன். (குஞ்)

## 30. 'சம்போ மகாதேவ தேவா' போல் பாடலாம்

துதிபாடி வருவோமே நாங்கள்,
தும்பிக்கையானின் துணைதனை வேண்டி (துதி)

1. சங்கரன் புதல்வன் அவனே
சங்கடம் தீர்க்கும் சங்கடஹரனே
உமையின் மடியிலே அமர்ந்து
உலகை காத்திடும் உமாபுத்திரன். (துதி)

2. குழந்தை தெய்வம் என்பர் உலகில்
குறைந்த நிவேதனத்தில் திருப்தி கொள்வர்
மழலையும் கிழவரும் மகிழும்
வேழமுகம் கொண்ட மாதவன் மருகோன். (துதி)

3. முறம் போன்ற காதுகள் கொண்டோன்
முறையீடு கேட்டருளும் முருகனின் சோதரன்
கண்கள் மூன்று உடையோன்
கஷ்டங்கள் தீர்க்கும் கணங்களின் நாயகன். (துதி)

4. தொந்தி பெரிதாகக் கொண்டோன், நற்
சந்ததி தந்தருளும் நந்திப்பிரியன்
மூடனுக்கும் புத்தி தருவான்
மூஷிகத்தில் வரும் மூஷிகவாகனன் (துதி)

5. பாசம், அங்குசம் உடையோன்
பணியாரம் மோதகம் கையிலேஏந்தி
பாறையில் பாரதம் எழுதி
பாதி தந்தம் உடைய வேதநாயகன். (துதி)

6. வறியனுக்கும் செல்வம் தருவான்.
வளமான விளைச்சல்தரும் வல்லபகணபதி
சிக்கலை தீர்த்து அருள்வான்
சிங்கத்திலே வரும் சித்தி, புத்தி நாதன். (துதி)

7. சாகாவரம் பெற அமிர்தம்
அமரர்க்கு தந்த நாகாபரணே
பதினாறு செல்வமும் தருவான்
பாதி நிலவணிந்த பாலசந்திரன். (துதி)

8. கற்பக விநாயகரை தினமும்
காலையும், மாலையும் கண்டு வணங்கி
அர்ச்சனை அபிஷேகம் செய்வோர்
அளவிலா ஆனந்தம் கொண்டு மகிழ்வார். (துதி)

## 31. 'ஏறு மயிலேறி விளையாடு முகம்' போல் பாடலாம்

1. சூலம், பாசத்துடன் சிவசக்தியாய்,
சக்கரம், தாமரையுடன் விஷ்ணு, லக்ஷ்மியாய்,
மாதுளை, தந்தமுடன் பிரமன், வாணியாய்,
நெற்கதிர், கதையுடன் பூவராகர், பூமியாய்,

2. கரும்புவில், நீலோத்பலமுடன் மன்மதன், ரதியாய்,
கரங்கள் பத்துடன், தும்பிக்கை நுனியில்
ரத்ன கலசத்துடன் மகாகணபதி
அனைத்து தேவருமாய் ஓருருவானார்.

3. தேவர்கள் வணங்கிடும் தேவகணமாய்,
மனித உடலுடன் மனித கணமாய்,
குட்டைக்கால் தொந்தியுடன் பூதகணமாய்,
யானைமுகம் கொண்ட மிருக கணமாய்

4. நெற்றியில் சூரியன், நாவில் சந்திரன்
வலது தொடையில் செவ்வாய், இடது தொடையில் கேது,
வலது கை மேல் சனி, வலது கைகீழ் புதன்,
இடது கைமேல் இராகு, இடது கை கீழ் சுக்கிரன்,

5. தலையில் வியாழன் என நவகிரங்களை
தன்னுள்ளே கொண்ட நவகிரகநாயகன்
அனைத்து கணங்களின் தலைவன் அவனே
அனைவரும் வணங்கிடும் முதல்வன் அவனே.

6. சிங்கத்தின் மேல் வந்தருளும் சிங்கவாகனன்.
மயில்மீது வந்தருளும் மயூரேசவிநாயகன்.
மூஷிகத்தில் வந்தருளும் மூஷிகவாகனன்
கட்டிய கோவிலில் வந்தமர்ந்தான் கற்பகவிநாயகன்
பக்தர் கட்டிய கோவிலில் வந்தமர்ந்தான் கற்பகவிநாயகன்.

## 32. கும்மி மெட்டு 108 கணபதி நமஸ்காரம்

1. அத்திகிரி கணபதி, அர்க்ககணபதி, ஆக்ஞாகணபதி நமஸ்காரம்
ஆலயகணபதி, ஆனந்தகணபதி, ஆனைமுககணபதி நமஸ்காரம்
உச்சிஷ்டகணபதி, உத்தண்டகணபதி, ஊர்த்வகணபதிநமஸ்காரம்
ஏகதந்தகணபதி, ஏகாட்சரகணபதி, ஓங்காரகணபதி நமஸ்காரம்.

2. கங்கைகணபதி, கரிமுககணபதி, கல்யாணகணபதி நமஸ்காரம்
கருணைகணபதி, கற்பககணபதி, கன்னிமூலகணபதி நமஸ்காரம்
சக்திகணபதி, சங்கடஹரகணபதி, சங்கஷ்டகணபதி நமஸ்காரம்
சடாஷரகணபதி, சதுர்த்தி கணபதி, சந்தான கணபதி நமஸ்காரம்

3. சம்பிரதாயகணபதி, சாம்ராஜ்யகணபதி, சிங்ககணபதி நமஸ்காரம்
சித்திகணபதி, சித்திபுத்திகணபதி,சிந்தாமணி கணபதி நமஸ்காரம்.
சிருஷ்டிகணபதி,சிவசக்திகணபதி, சுந்தரகணபதி நமஸ்காரம்
சுயம்பு கணபதி, சூரகணபதி, சூர்ப்பகர்ணகணபதி நமஸ்காரம்.

4. செல்லகணபதி, செல்வகணபதி, சோடசகணபதி நமஸ்காரம்.
சோமகணபதி, ஞானகணபதி, டுண்டிகணபதி நமஸ்காரம்
தருணகணபதி, திரிமுக கணபதி, திருஷ்டி கணபதி நமஸ்காரம்
திரையாக்ஷர கணபதி, தீரகணபதி, துர்கா கணபதி நமஸ்காரம்.

5. துவிபுஜகணபதி, துவிமுக கணபதி, துவிஜகணபதி நமஸ்காரம்
தூர்வாகணபதி, தொண்டிகணபதி, நடனகணபதி நமஸ்காரம்
நரமுககணபதி, நர்த்தன கணபதி, நவசக்தி கணபதி நமஸ்காரம்
நவநீதகணபதி, நாகாபரணகணபதி, நான்முககணபதி நமஸ்காரம்

6. நிருத்ய கணபதி, நேத்ரகணபதி, பக்திகணபதி நமஸ்காரம்
பஞ்சமுக கணபதி, பஞ்சாட்சர கணபதி,
பல்லாலேஸ்வரகணபதி நமஸ்காரம்
பாலகணபதி, பிங்கள கணபதி, பிப்ரகணபதி நமஸ்காரம்
பிரசன்னகணபதி, பிரணவகணபதி, பிரம்மகணபதி நமஸ்காரம்.

7. புவன கணபதி, மகாகணபதி, மயூரேச கணபதி நமஸ்காரம்
மும்முக கணபதி, மூலாதார கணபதி, மோட்சகணபதி நமஸ்காரம்
மோதக கணபதி, யாக கணபதி, யோக கணபதி நமஸ்காரம்
ரணமோசன கணபதி, ரத்ன கணபதி, ராஜகணபதி நமஸ்காரம்.

8. லம்போதரகணபதி, லக்ஷ்மிகணபதி, வக்ரதுண்டகணபதி
நமஸ்காரம்
வரகணபதி, வரசித்திகணபதி, வரதகணபதி நமஸ்காரம்
வல்லபகணபதி, வள்ளால கணபதி, வாமனகணபதி நமஸ்காரம்
வன்னிகணபதி, வாதாபி கணபதி, விக்ன கணபதி நமஸ்காரம்.

9. விக்னராஜகணபதி, வித்யாகணபதி, விநாயக கணபதிநமஸ்காரம்
விஜய கணபதி, வீணா கணபதி, வீரகணபதி நமஸ்காரம்
ஸ்வர்ணகணபதி, ஸ்வேதகணபதி, ஹரித்ராகணபதி நமஸ்காரம்
ஹேரம்பகணபதி, ஜ்வரஹரகணபதி, க்ஷிப்ரகணபதி நமஸ்காரம்

கற்பக கணபதியே நமஸ்காரம்
கண்கண்ட தெய்வமே நமஸ்காரம்.

## 33. 'கற்பக வள்ளி' போல் பாடலாம்

பல்லவி

கல்லுப்பிள்ளையார் என்றுன்னை மக்கள்
அழைப்பது ஏனென சொல்வாய் கணேசா (கல்)

அனுபல்லவி

அல்லல் படுபவர் அன்புடன் அழைத்ததும்
அருள் செய்து காத்திடும் கணபதி உன்னை உலகம். (கல்லு)

சரணம் 1

1. அசுரரிடம் அஞ்சிய அமரர் பிரமனை நாடி,
பிரமன், விஷ்ணு, சிவனோ வந்தனர் உன்னைத்தேடி
உதவி செய்தே நீ உலகினரை காத்தாய்
உலகையே காத்த உனக்கு இந்தப்பெயர்ஏனெனசொல்வாய் (கல்)

2. கல்லினால் மட்டுமின்றி, களிமண், புற்றுமண்,
வெல்லம், உப்பு, வேப்ப மரத்தினால்
கணபதியே உன்னைப் பிடித்து பூஜிப்போர்க்கு,
கோரிய பலன் தந்து அருள் செய்யும் உன்னை உலகம் (கல்லு)

3. அழகன் முருகனென்று தமிழ்மறை கூறிடினும்
அமரர்க்குதவ என ஆனை முகத்தினையும்,
அகிலத்தை காக்கவென பெரிய வயிறும் கொண்டாய்
தன் உருவம் நினையாது பிறருக்குதவும் உன்னை. (கல்லு)

4. கலியுக தெய்வமே, கருணை பொழிபவனே
கற்கவேண்டும் உன்னிடமே, பிறருக்குதவ என,
'கல் பிள்ளையாரிடம்' என கல்லுப்பிள்ளையார் என்றாரோ
கற்பக கணபதியே கருத்தை நீ சொல்வாயே. (கல்லு)

## 34. 'போ சம்போ' போல் பாடலாம்

பல்லவி

வா நீ வா கணேசா நீ வா (5 முறை) (வா)

அனுபல்லவி

கணங்களின் தலைவனே கணேஸ்வரா.
விக்னத்தை தீர்க்கும் விக்னேஸ்வரா. (வா)

சரணம்

1. ஔவை கேட்டாளென முதுமைதந்தாயே
வியாசர் சொல்லி எழுதி பாரதம் தந்தாய்
நம்பிதந்தானென துதிக்கையால் உண்டாய்
உந்தனடி பணிவோரின் உள்ளத்திலே வந்திட (வா)

2. தொங்கும் வயிறு முன்னே குலுங்கிட
ஐங்கரம் தும்பிக்கை அங்கும் இங்கும் அசைந்திட
அரைஞாணில் ஆதிசேஷன் ஆனந்தமாய் பார்த்துவர
பிறைமதி நெற்றிமுன் பளீரென ஒளிதர
மூஷிகத்தில் வந்து பக்தரை காத்திடும்
ஈசா ....... கணேசா ......... மனவாசா. (வா)

## 35. விநாயகரின் 12 அவதாரம். 'கல்யாணரூபாய' போல் பாடலாம்

1. அவதாரம் யுகந்தோறும் எடுத்து வந்து
அடியார்க்கு அருள் செய்ய வந்தாயப்பா
அவதாரம் பன்னிரெண்டை பரமசிவன்
அழகாக முருகனுக்கு சொன்னாரப்பா.

2. ப்ரளயம் முடிந்ததும் முன்வந்தீர்
வக்ர துண்ட விநாயகர் அவதாரமாய்
பிரமன், விஷ்ணு, ருத்திரனை
முத்தொழில் செய்ய அருள் செய்தீர்

3. கபிலரின் சிந்தாமணியை கணனிடம்
மீட்டீர் சிந்தாமணி விநாயகனாய்
கந்தர்வன் கிரௌஞ்சனின் சாபம் தீர்க்க
வந்தீரே விக்னராஜ விநாயகனாய்.

4. உமையின் கருவிலே உருவானீர்
சிரத்தை சிதைத்தான் சிந்தூரன்
கஜமுகன் சிரம்தனை பொருத்திக் கொண்டு
கஜானனராய் கொன்றீர் சிந்தூரனை.

5. மல்லாலராக அவதரித்து,
மாமுனிவர் சொல்ல யாகம் செய்து,
மயிலை வாகனமாகப் பெற்று,
கமலாசுரனை அழித்த மயூரேசரே.

6. சிவன் வரம் பெற்ற சிந்துராஜனை அழிக்க
சிவன் சொல்லி பார்வதி விரதம் இருந்தார்
பார்வதி தேவியின் பக்திக்கிரங்கி
பாலவிநாயகராய் அவதரித்தீர்.

7. தூமாசுரனை கொல்ல வேண்டி
சுயமாக சுமுதையிடம் அவதரித்தீர்
புகைகக்கி தூமாசுரன் அழித்த போது
புகையினால் அவனை கொன்ற தூமகேது.

8. பஞ்சமுகம் கொண்ட கணேசராக
பரமசிவன் முகத்தினில் தோன்றினீர்.
ஐங்கரனே உந்தன் நாமம் சிவன் சொல்லி
அசுரன் திரிபுரனை சங்கரித்தார்.

9. சித்திரத்தின் உட்ப்பொருளை உமைகேட்க
சிவகுமாரன் கணபதியாய் அவதரித்தீர்
சிவன் வரம் பெற்ற கஜமுகாசுரனை
சிறிய தந்தத்தினால் சங்கரித்தீர்.

10. அதிதி, காசிபரின் மகனாக
அவதரித்தீர் மகோற்கடவிநாயகராய்
மணந்தீர் பிரமன் மகளிரை
மாபெரும் அசுரரை சங்கரித்தீர்.

11. அரசன் ரிபுஞ்சயனின் ஆணையினால்,
அமரர் அஞ்சினர் காசிவர
உருவாகி சோதிட சிறுவனாக
உதவினீர் உடுண்டிவிநாயகராய்.

12. மரீசி முனிவரின் பக்திக்கிரங்கி
மழுவுடன் மூஷிகத்தில் காட்சி தந்தீர்
மரீசியின் மகளை மணந்து கொண்டு
வல்லபகணபதி ஆனீரப்பா.

13. பன்னிரெண்டு அவதாரம் தனை பக்தியுடன்
பாடிவரும் பக்தருக்கு அருள் செய்வாய்,
பரமசிவன், பார்வதியும் பக்கத்திலிருக்க
பன்னிருகை வேலனுடன் காட்சி தருவாய்.

14. வித்யா கணபதியாய் கல்வி தருவாய்
லக்ஷ்மி கணபதியாய் செல்வம் தருவாய்
துர்கா கணபதியாய் வல்லமை தருவாய்
கற்பக கணபதியே வரங்களை அருள்வாய்
கற்பக கணபதியே வரங்களை அருள்வாய்.

## 36. 'வெள்ளை தாமரை' போல் பாடலாம்

பல்லவி

வேதம் போற்றும் வேதநாயகன்
வேழமுகம் கொண்டோன் வேலனின் சோதரன். (வேதம்)

அனுபல்லவி

நாதஸ்வரூபன், நாகமணிந்தவன்
நானிலம் போற்றும் ஞால முதல்வன் (வேதம்)

சரணம்

1. பரதம் தந்தையுடன் தில்லையில் ஆடி,
பாரினுள் தாய்க்கு யந்திரம் தேடி,
பண்ண கந்தன் மணம் யானையாய் ஓடி,
பணிந்த அமரர்க்கு தந்தான் வெற்றிதேடி. (வேதம்)

2. வேதிய வடிவெடுத்து வேதத்தை மீட்டுத்தந்து
வாதாபியை வெல்ல அகத்தியனுக்கருளி
சோதிடனாக ரிபுஞ்சயனிடம் பேசி
விஸ்வநாதரிடம் காசியை தந்தவன். (வேதம்)

3. பக்தர் அனைவரும் ஒன்றாய்கூடி
கற்பக விநாயகன் புகழினைப்பாடி
அவன் பதம் பணிந்தால் அடைக்கலம் தேடி
அருள் செய்ய வருவான் மூஷிகத்தில் ஓடி. (வேதம்)

## 37. 'ஆனந்தம், ஆனந்தம்' போல் பாடலாம்

பல்லவி

ஆனைமுகன் அருளியதை பாடிடுவோம்
அஞ்சிவந்த அமரர்க்கும் தஞ்சமடைந்த பக்தருக்கும் (ஆனை)

சரணம்

1. வஞ்சனையால் அசுரர் வானோரை துரத்த
இந்திரனும் ஏனையோரும் கண்டுமிரண்டு,
தஞ்சமடைந்து ஐங்கரனை அழைத்திடவே
அஞ்சேலென அபயமளித்து அசுரரைக் கொன்றார்.

2. பாற்கடலை கடையும்போது அமரர் பூஜிக்க
பாற்கடலில் அமிர்தம் அமரர்க்குத் தந்தார்
தாருகனை வெல்லும் முன் முருகன் வணங்கவே
முருகனுக்கு வாகனமாய் மயிலைத் தந்தார்.

3. அங்காரகன் சதுர்த்தி விரதம் இருந்து
மங்களன் என்ற பெயர் பெற்றான்
தேவருடன் கூடி அமிர்தம் அருந்தி
கிரகங்களுடன் ஒன்றாய் சேர்ந்து கொண்டான்.

4. ஆயிரம் பிளவு தலையில் பெற்ற ஆதிசேஷன்
ஆனைமுகனை பணிந்தாயிரம் தலைபெற்றான்.
சிந்தாமணி விநாயகரை இந்திரன் பூஜிக்க
நந்தவனத்தில் காவிரி பாயவைத்தார்.

5. பாண்டவர் ஐங்கரனை பூஜை செய்து,
பாரதப் போரினில் வெற்றி கண்டார்.
பிரவாள விநாயகனை வணங்கி லங்கைக்கு
இராவணன் அதிபதி பதவி பெற்றான்.

6. நம்பி வந்த பக்தருக்கும் அருள் செய்தார்.
நம்பி, ஔவை, அகத்தியனுக்கு அருள் செய்தார்
இம்மையிலும் மறுமையிலும் இன்புற்று வாழ
நாம் கற்பக விநாயகரை சரணடைவோம்.

## 38. 'ப்ரம்ம முராரி' போல் பாடலாம்.

1. அமரர்க்கு அமிர்தம் தந்த **வலம்சுழி விநாயகன்**
அன்னை தந்தையே அகிலமென்று **வலம்வந்த விநாயகன்**
உதித்தவர் சிவன் முகத்தில் **பஞ்சமுக விநாயகன்**
விக்னத்தை தீர்த்தருளும் **விக்ன விநாயகன்.**

2. உமையிடம் தோன்றிய **நரமுக விநாயகன்**
கடற்கரையில் கோவில் கொண்ட **மணற்குள விநாயகன்**
கடல்நீரைவற்றச் செய்த **ப்ரளயம்காத்த விநாயகன்.** (4ம் வரி)

3. கந்தர்வன் சாபம் தீர்த்த **விக்னராஜ விநாயகன்**
கந்தனின் மணம்முடித்த **கல்யாண விநாயகன்**
கஜமுகன் சிரம் கொண்ட **யானைமுக விநாயகன்.** (4ம் வரி)

4. காசிவர தேவர்க்குதவிய **உடுண்டி விநாயகன்.**
கார்த்தவீர்யன் பூஜித்த **ப்ரவாள விநாயகன்**
காவிரியை வழிவிடச் செய்த **ஓலமிட்ட விநாயகன்.** (4ம் வரி)

5. **கை லிங்கத்தை தரையில் வைத்த குட்டுப்பட்ட விநாயகன்**
**சந்திரனை தலைமுன் தரித்த பாலசந்திர விநாயகன்.**
**சிங்கத்தின்மேல்** வந்தருளும் **சித்திபுத்தி விநாயகன்.**(4ம் வரி)

6. சிந்தாமணியை கணனிடம் மீட்ட **சிந்தாமணி விநாயகன்**
தந்தையுடன் நடனமாடிய **நர்த்தன விநாயகன்**
தேரச்சை சீர்செய்த **அச்சிறுத்த விநாயகன்.** (4ம் வரி)

7. பாரதம் எழுதி தந்த **வேதவிநாயகன்**
பாரமாகி கோவில் கொண்ட **ஈச்சனாரிவிநாயகன்**
ப்ரளயத்தில் உலகை காத்த **வக்ரதுண்ட விநாயகன்.** (4ம்வரி)

8. மயிலைப் பெற யாகம் செய்த **மயூரேச விநாயகன்.**
மரீசிமுனியின் மகளை மணந்த **வல்லப விநாயகன்.**
மலைக்கோட்டை கீழமர்ந்த **மாணிக்க விநாயகன்** (4ம் வரி)

9. மாபெரும் அசுரரை கொன்ற மகோற்கடவிநாயகன்
விஷ்ணு சக்கரம் விழுங்கிய விகடசக்ரவிநாயகன்
விஷ்ணுவை சாந்தம் செய்த விகட விநாயகன். (4ம் வரி)

10. வெயில், மழையில் வீற்றிருக்கும் வெயிலுகந்த விநாயகன்
வேதியனாய் ஞானமளித்த ஞான விநாயகன்
வேலனுக்கு மயில் தந்த இலக்க விநாயகன். (4ம் வரி)

11. ஹிரண்யனை வெல்லச் செய்த வன்னி விநாயகன்
ஸ்ரீரங்கம் நமக்கு தந்த பால விநாயகன்
வளமான வாழ்வு தரும் மங்கள விநாயகன். (4ம் வரி)

12. ஆனந்தம் அளித்திடும் ஆனந்த விநாயகன்
சித்தி அருளிடும் சித்தி விநாயகன்
செல்வம் தந்திடும் செல்வ விநாயகன் (4ம் வரி)

13. வெற்றியையே தந்திடும் வெற்றி விநாயகன்
வேண்டும் வரம் தந்தருளும் கற்பக விநாயகன்
பக்தருக்கு நல்வழி காட்டும் வழிகாட்டிய விநாயகன்.(4ம்வரி)

## 39. ஆனைமுகனின் அற்புத லீலைகள்

(பாக்யாதலக்ஷ்மி போல் பாடலாம்.)

விநாயகன் புகழை பாடிடுவோம்
அனைவரும் ஒன்றாய் கூடி (விநா)

1. அசுரரை அழிக்க வந்த சிவசக்தி கணபதி
2. அன்னை காவல் காக்க செய்த நரமுக கணபதி
3. ஆதிசேஷனுக்கருளிய தரணிதர கணபதி
4. ஆதிசேஷனை அணிந்து கொண்ட நாகாபரணகணபதி
5. இடத்தை வெல்ல நீதிமன்றம் சென்ற வரதமகாகணபதி
6. இரண்யனை வெல்ல விஷ்ணுக்கருளிய விஷ்ணுகணபதி
7. இரண்யாட்சனை வெல்ல திருமால் பூஜித்த வராக கணபதி
8 இராமனுக்கு யோசனை சொன்ன தொண்டிகணபதி
9 ஓங்கார வடிவம் கொண்ட ஓங்கார கணபதி
10. ஔவையை கயிலையில் சேர்த்த பஞ்சாட்சர கணபதி
11. களிறும், பிடியுமாய் கலந்துதித்த பிரணவ கணபதி
12. கஜமுகன் சிரம் கொண்ட யானைமுக கணபதி
13. காவிரி சமுத்திரம் மணம் செய்வித்த அபீஷ்டவரத கணபதி
14. காவிரிநீர் பாயவைத்த காவிரிகண்ட கணபதி
15. கிரவுஞ்சனை மூஷிகமாக்கிய மூஷிகவாகன கணபதி
16. கிருச்சமதர்க்கு அருளிய வரத கணபதி

17. கிருஷ்ணர் பூஜித்த சங்கடஹர கணபதி
18. கீழருகிற்கு பெருமை தந்த தூர்வா கணபதி.
19. கும்பாசுரனை அழித்த ஆனைகுட்டே கணபதி.
20. சிவன் பார்வதி மணம் செய்வித்த சேர்க்கை கணபதி
21. சிவனுடன் சேர்ந்து ஆடிய நர்த்தன கணபதி
22. சீதையை மீட்க இராமன் தொழுத உப்பூர் கணபதி.
23. சூரியன் பாவம் போக்கி அருளிய ஆதவ கணபதி
24. சேந்தனை சிறைமீட்ட குஞ்சரமுக கணபதி
25. தன் ஆயிரம் நாமம் தந்தைக்குரைத்த மகாகணபதி
26. துஷ்யந்தன், சகுந்தலைமணம் செய்வித்த கல்யாண கணபதி
27. தூமாசுரனை தூமத்தால் கொன்ற தூமகேது கணபதி.
28. தேரச்சை சீர்செய்த அச்சிறுத்த கணபதி.
29. பரசுவைதாங்கி தந்த முறிந்த ஏகதந்த கணபதி
30. பலியை வெல்ல திருமால் பூஜித்த வாமன கணபதி
31. பாஞ்சஜன்யத்தை மீட்டுத்தந்த அத்திகிரிகணபதி
32. பாம்பான விஷ்ணுவை சுய உருவாக்கிய சிவகுமார கணபதி.
33. பார்வதியின் கருவிலுதித்த பாலகணபதி
34. பிரமனுக்கு காட்சிதந்த ஏகாட்சரகணபதி
35. ப்ரளயத்தில் உலகைகாத்த வக்ரதுண்ட கணபதி
36. மதுகைடபரை வெல்ல விஷ்ணுக்குதவிய சித்தி கணபதி
37. வயிற்றுள் உலகை வைத்துக்காத்த லம்போதர கணபதி
38. வரேண்யனின் மகனாய் வந்த இராஜகணபதி
39. வள்ளாலனுக் கருளிய வள்ளால கணபதி
40. வாதாபியை ஜீரணிக்க செய்த வாதாபி கணபதி
41. விசிறிக்காதால் அக்னியை காத்த சூர்ப்பகர்ண கணபதி
42. வியாசருக்கு வாக்குவளம் தந்த வரசித்தி கணபதி
43. விரட்டி சனியை சாஸ்தாக்குதவிய விஜயகணபதி
44. விரோசனை பக்திக்கு செல்வமளித்த பக்திகணபதி
45. அமிர்தம் ஒளித்து வைத்த கள்ளவாரணப் பிள்ளையார்.
46. அரங்கனை தரையில் வைத்த திருச்சி உச்சிப்பிள்ளையார்.
47. ஆயிரம் தலைகேட்ட மூக்கரைப்பிள்ளையார்.
48. ஏகாதச ருத்ரராய் வந்த சேண்பாக்கப் பிள்ளையார்.
49. கரும்பை கரிக்கச் செய்த கரும்பாயிரம் பிள்ளையார்.
50. கன்றை உயிர்ப்பித்த வெள்ளிப் பிள்ளையார்
51. சிவன்காசை எண்ணித்தந்த ஆழத்துப் பிள்ளையார்.
52. தாண்டவதரிசனம் துர்வாசருக்குதந்த கூத்தாடும் பிள்ளையார்.
53. நம்பியின் அமுதுண்ட பொல்லாப்பிள்ளையார்.
54. பக்தனுக்காக குளம்வெட்டிய குளம்வெட்டிய பிள்ளையார்.

55. பாறையில் குறுதிவரச் செய்த காணிப்பாக்கம் பிள்ளையார்.
56. ஜாதிக்காயை கடுக்காயாய் மாற்றிய கடுக்காய்ப் பிள்ளையார்.
57. பெண்வடிவும், புலிகால்களுடன் வந்த வியாக்ரபாதவிநாயகி.
58. அங்காரகனுக்கருளிய மங்கள விநாயகன்.
59. அசுவமேத யாகம் செய்த நாலாயிரத்தோர் விநாயகன்.
60. அதிதி காசிபர் மகனாய் வந்த மகோற்கடவிநாயகன்.
61. அமிர்தம்பெற தேவர்வணங்கிய ஸ்வேத விநாயகன்.
62. அன்னையை சாந்தம் செய்த பிரசன்ன விநாயகன்.
63. ஆத்மலிங்கத்தை தரையில் வைத்த குட்டுப்பட்ட விநாயகன்.
64. ஆற்றுநீர் கீழ் அகஸ்தியர் பூஜித்த பாதாள விநாயகன்.
65. கடல்நீரை கிணற்றில் அடக்கிய கலங்காமல்காத்த விநாயகன்
66. கடல்நீரை வற்றச் செய்த ப்ரளயம்காத்த விநாயகன்.
67. கந்தன் வள்ளி மணம்முடித்த ஆபத்சகாய விநாயகன்.
68. கரிகாலனுக்கு துணை செய்த துணைஇருந்த விநாயகன்.
69. கஜமுகாசுரனை சங்கரித்த செந்தூர விநாயகன்.
70. காக்கை, பாலனாய் வடிவெடுத்த விகடவிநாயகன்.
71. கார்த்த வீர்யன் பூஜித்த ப்ரவாள விநாயகன்.
72. காவிரியை வழிவிடச் செய்த ஓலமிட்ட விநாயகன்.
73. கிப்பிரசாதனுக்கு பரசுதந்த துண்டிவிநாயகன்.
74. கும்பகர்ணனை தண்டித்த கும்பகர்ண விநாயகன்.
75. சம்பந்தருக்கு பாதை காட்டிய வழிகாட்டிய விநாயகன்.
76. சித்தி, புத்தியை மணந்து கொண்ட சித்திபுத்தி விநாயகன்.
77. சிந்தாமணியை கணனிடம் மீட்ட சிந்தாமணிவிநாயகன்.
78. சிவனிடம் காசிதந்த உடுண்டிவிநாயகன்.
79. சிவன் முகத்தில் தோன்றிய பஞ்சமுகவிநாயகன்.
80. சுந்தரருக்கு கூவிக்காட்டிய கூப்பிடுவிநாயகன்.
81. சுமி, அவுரவன் சாபம் குறைத்த வன்னியடி விநாயகன்.
82. தந்தை தாயை சுற்றிவந்த வலம்வந்த விநாயகன்.
83. தாருகனை வெல்ல முருகனுக்குதவிய லக்க விநாயகன்.
84. திருமறைகள் உபதேசித்த உபதேச விநாயகன்.
85. துராசதனை காசியில்வென்ற வக்கிரமூர்த்தி விநாயகன்.
86. தேவர்க்கு அமிர்தம் தந்த வலம்சுழி விநாயகன்.
87. நவகன்னியர் பாவம் போக்கிய அரசமர விநாயகன்.
88. நவகிரகங்களும் தன்னுள் கொண்ட நவகிரக விநாயகன்.
89. நிலவின்சாபம் போக்கி அணிந்த பாலசந்திர விநாயகன்.
90. நீரான தேவரை சுயஉருவாக்கிய ஹேரம்பவிநாயகன்.
91. பஞ்ச பூதங்களும் தன்னுள் அடங்கிய பஞ்சசக்தி விநாயகன்.
92. பாரமாகி கோவில் கொண்ட ஈச்சனாரி விநாயகன்.

93. பார்த்தனுக்கு பயிற்சிதந்த பாசுபதம் **தந்த விநாயகன்.**
94. பிருகு முனிக்கு கண்தந்த **கண்கொடுத்த விநாயகன்.**
95. புழுங்கல்நெல்லை பக்தனுக்களித்த **புழுங்கல்வாரி விநாயகன்**
96. பூமி கீழ் கண்டு நாயகன் எடுத்த **முக்குருணி விநாயகன்.**
97. பெண்ணை ஆணாய் மாற்றிய **பரிதாபம் தீர்த்த விநாயகன்.**
98. பேயை உதைக்க காலை தூக்கிய **வீரஹத்திவிநாயகன்.**
99. மணற்குளத்தில் கோவில் கொண்ட **மணற்குளவிநாயகன்.**
100. மரீசி மகளை மணந்து கொண்ட **வல்லப விநாயகன்.**
101. மிளகை உளுந்தாக்கிய **பொய்யாமொழி விநாயகன்.**
102. யாகத்தில் மயிலைப் பெற்ற **மயூரேச விநாயகன்.**
103. வாயின் சக்ரத்தை விழவைத்த **விகடசக்ரவிநாயகன்.**
104. விக்னனை அடக்கிய **விக்னராஜவிநாயகன்.**
105. வியாசர் சொல்லி பாரதம் எழுதிய **வேதவிநாயகன்.**
106. வேந்தன் ஜனகனுக்கு ஞானமளித்த **ஞானவிநாயகன்.**
107. பிள்ளையார்பட்டி குகைகோவில் கொண்ட **தேசிவிநாயகன்.**
108. கற்பகதருவாய் கேட்டவரம் தரும் **கற்பக விநாயகன்.** (விநா)

## 40. எழுத்து வரிசையில் ஏகதந்தன் நாமம்

(ஜெயதி தேஹிதம் கிருஷ்ணா' போல் பாடலாம்)

**அ**கிலம் படைத்தோனே கணேசா **ஆ**னந்தமருள்வோனே.
**இ**த்மம் பிரியனே கணேசா **ஈ**சனின் புத்திரனே
**உ**ம்பர் தலைவனே கணேசா **ஊ**ரும் எலிவாகனனே
எழுதினீர் பாரதம் கணேசா **ஏ**ந்தினீர் மோதகம்
**ஐ**ங்கரம் உள்ளவனே கணேசா **ஒ**ரு தந்தம் உள்ளவனே.
**ஓ**ங்கார ஸ்வரூபவனே கணேசா **ஔ**வைக்கு அருளியோனே
**க**ணங்களின் தலைவனே கணேசா **கா**விரி தந்தவனே
**கி**ரகதோஷம் நீக்குவோனே கணேசா **கீ**ர்த்திக்கு அருளியோனே
குபேர ஸ்வரூபனே கணேசா **கூ**த்தாடும் ஐங்கரனே
**கெ**ட்டவினை களைபவனே கணேசா **கே**ட்டவரம் தருவோனே.
**கை**லாசபதி மைந்தனே கணேசா **கொ**ழக்கட்டைப் பிரியனே.
**கோ**டரி ஏந்தியோனே கணேசா **கௌ**ரியை மகிழ்விப்போனே
**க்**+அந்தனுக்கு மூத்தோனே கணேசா **ங**போர் மழு ஏந்தியோனே.
**ச**ங்கு ஏந்தியோனே கணேசா **ச**க்கரம் ஏந்தியோனே
**சா**ந்த ஸ்வரூபனே கணேசா **சி**ங்கவாகனனே
**சீ**றும் பாம்பணிந்தீர் கணேசா **சு**முக மூர்த்தியே.
**சூ**லம் ஏந்தியோனே கணேசா **செ**க்கச் சிவந்தவனே.
**சே**னையின் நாயகனே கணேசா **இ**சைப் பிரியனே.

சொற்பதங்கடந்தோனே கணேசா சோமகலாதரனே
சௌமாங்கல்யம் அருள்வோனே கணேசா முச்சந்தியில் அமர்ந்தோனே.
ஞாலமுதல்வனே கணேசா சஞ்சலம் தீர்ப்போனே.
இடம்சுழி கொண்டவனே கணேசா டாமர ரூபனே.
அடியார்க்கருள்பவனே கணேசா டுண்டிவிநாயகனே
தடைகள் நீக்குவோனே கணேசா டோலிவாலாபிள்ளையாரே
பட்டாடை அணிந்தோனே கணேசா மணற்குளவிநாயகனே
ஆவணியில் உதித்தவனே கணேசா அணுவிற்குள் அணுவானீர்
பூணூல் அணிந்தவனே கணேசா வீணையை ஏந்தியோனே.
அண்டம் காத்தவனே கணேசா தனதான்யம் தருவோனே.
தாமரை ஏந்தியோனே கணேசா திருமகள் பிரியனே
தீரன் சூரனே கணேசா துங்காநதி தூக்கியோனே.
தூமநிறம் கொண்டவனே கணேசா தெய்வ முதல்வனே.
தேவரை காத்தவனே கணேசா தைத்யரை அழித்தவனே.
தொங்கும் வயிற்றோனே கணேசா தோப்புக்கரண பிரியனே.
தௌர்பாக்யம் அழிப்பவனே கணேசா த்ரையாட்சர கணபதியே
நந்திப்பிரியனே கணேசா நாதஸ்ரூபனே
நித்தியப் பொருளே கணேசா நீண்ட காதுள்ளோனே.
நுதலில் மதிஅணிந்தீர் கணேசா நூபுரம் அணிந்தவனே.
நெற்கதிர் ஏந்தியோனே கணேசா நேத்திரம் மூன்றுள்ளோனே.
நைவேத்யம் உண்டவனே கணேசா நொந்தோர் துயர்தீர்ப்போனே
நோய்தீர்ப்பவனே கணேசா தந்தம் ஏந்தியோனே.
பசுபாசவிமோசகனே கணேசா பாசத்தை ஏந்தியோனே.
பிரம்மசாரியே கணேசா பீதாம்பரம் அணிந்தவனே.
புவனகாரணனே கணேசா பூரணஸ்வரூபனே.
பெரியவயிற்றோனே கணேசா பேரின்பம் தருபவனே.
பையனாக வந்தவனே கணேசா பொரிவிளங்காய்ப் பிரியனே.
போட்டியில் வென்றீரே கணேசா பௌத்தமதமானவனே
ப்ரளயம் காத்தவனே கணேசா மத்தள வயிற்றோனே.
மாதுளை ஏந்தியோனே கணேசா மிக்க பலம் உள்ளவனே.
மீஞ்சூர் கொடியோனே கணேசா முறக்காது கொண்டவனே.
மூலப் பொருளோனே கணேசா மெய்ஞானம் தருபவனே.
மேகநாதம் கொண்டவனே கணேசா உமையவள் மைந்தனே
மோகினிப் பிரியனே கணேசா மௌனாகாரசுழியனே
நம்பிக்கு அருளியோனே கணேசா யஜுர் வேதமானவனே
யாகத்தில் மயில் பெற்றீர் கணேசா ஆயிரம்நாமத்து அண்ணலே
ஆயுர்வேத வடிவோனே கணேசா மயூரேச விநாயகனே
யேந்தினீர் கலசத்தை கணேசா தயை உள்ளவனே

யோகிகளின் தலைவனே கணேசா யெளவனத்தில் முதுமை தந்தீர்.
தாய்க்கு காவல் காத்தீர் கணேசா ரத்னகலசம் ஏந்தினீர்.
ராட்சதரை சங்கரித்தீர் கணேசா அரியின் மருமகனே.
மரீசிக்கருளியோனே கணேசா ருத்ரப்பிரியனே.
குரூராசுரனை கொன்றவனே கணேசா ரெண்டு அன்னைஉள்ளவனே
வரேண்யனின் புத்திரனே கணேசா அரைஞாணில் பாம்பணிந்தீர்.
கிரௌஞ்சன் சாபம் தீர்த்தீர் கணேசா கர்வம் அடக்கினீர்
லட்டுபிரியனே கணேசா லாபனின் அப்பனே.
புலித்தோலை அணிந்தோனே கணேசா மலைப்பாம்பாய் வந்தவனே
நீலோத்பலம் ஏந்தியோனே கணேசா வல்லபநாயகனே.
வராஹமாய் வந்தோனே கணேசா வாக்குகளின் கணபதியே
வில்லை ஏந்தியோனே கணேசா வீராசனத்தில் அமர்ந்தோனே.
தேவூர் கணபதியே கணேசா வெள்ளை ஆடை அணிந்தோனே.
வேள்விரூபமானவனே கணேசா வைணவரும் வணங்குபவனே.
செவ்வாய்ப்பிள்ளையாரே கணேசா குழந்தை தெய்வமே
அழிவில்லாதவனே கணேசா விழுங்கினீர் அனலனை.
பேழைவயிற்றோனே கணேசா ஊழ்வினை அகற்றுவோனே.
இளம்பிறை அணிந்தவனே கணேசா ஒளித்தீர் அமிர்தத்தை
வளைந்த துதிக்கை உள்ளோனே கணேசா வள்ளிமணம்
செய்வித்தோனே.
அறத்தை அளிப்பவனே கணேசா அறிவாற்றல் தருவோனே.
அறுகம்புல் பிரியனே கணேசா பாறையில் எழுதியோனே.
கற்பக கொடியோனே கணேசா ஞானப்பழம் பெற்றவனே.
ஞானானந்தனே கணேசா மனிதரூபமானவனே.
சனீஸ்வரனை வென்றவனே கணேசா தனுர்வேதமானவனே.
யானைமுகத் தோனே கணேசா வானோர் வணங்குபவனே.
மன்மதனை உயிர்பித்தோனே கணேசா கன்னல்பிரியனே.
கண்கண்ட தெய்வமே கணேசா கரங்கூப்பி வணங்கினோமே
கலியுக தெய்வமே கணேசா கழல் பணிந்தோமே.
கற்பக விநாயகனே கணேசா கணமும் மறவோமே.
கட்டினோம் மனக்கோவில் கணேசா அமர்ந்து அருளிடுவீர்.

## 41. ஆனைமுகன் அருளும், அவர்சூடிய பெயரும்

'ஸ்கந்தகுருகவசம்' போல் பாடலாம்.

ஆனை முகத்தோனின் அற்புத லீலைகளை,
அழகு தமிழில் நாம் பாடிடுவோமே.
அகில முதல்வனின் அருட்ப்பார்வையால்,
ஆனந்தமாய் நாம் வாழ்ந்திடுவோமே.

1. அன்னைக்கு காவல் காக்க, மஞ்சளால் திரட்டிச் செய்து
அன்னை உருவாக்கிய **நரமுக விநாயகன்**

2. சிவனுடன் சண்டை இட்டு, சிரத்தை இழந்தபின்
யானைத்தலை கொண்ட **யானைமுக விநாயகன்**

3. சிவன் வரம் பெற்று, சிரகனம் கொண்ட
அசுரரை அழிக்க வந்த **சிவசக்தி கணபதி**

4. அன்னை தந்தையே அகில மென்று நீ
அவர்களை சுற்றிய **வலம் வந்த கணபதி**

5. ஏகாட்சரம் ஓதிய வாதநாராயணருக்கு
வாக்குவளம் தந்த **வரசித்தி கணபதி.**

6. பராசரர் மகன், பாரதம் சொல்லவே
பாதி தந்தத்தால் எழுதிய **வேத விநாயகன்.**

7. ஏழுகடல் நீரை ஒரு கிணற்றுள் அடக்கியே
ப்ரளயம் தடுத்த **கலங்காமல் காத்த விநாயகன்.**

8. ப்ரளயம் வருகையில் வயிற்றைப் பெரிதாக்கி
உலகைக் காத்த **லம்போதர கணபதி**

9. ப்ரளயம் முடிந்ததும் பிரமன், விஷ்ணு, சிவனை
முத்தொழில் செய்யச் சொன்ன **வக்ரதுண்ட கணபதி.**

10. ஏகாட்சரத்தினால் பிரமன் தியானம் செய்யவே
படைப்பைத் தொடங்க அருளிய **விக்னேஸ்வரன்.**

11. பிரமன் மகளிரான சித்தி, புத்தியை
மணந்து கொண்ட சித்தி, **புத்தி விநாயகன்.**

12. மது, கைடபரை வெல்ல சடாஷரத்தினால்
விஷ்ணு தியானம் செய்த **சித்தி கணபதி.**

13. தக்கனின் பக்திக்கு, முற்கல முனிவர் போல்
காட்சி தந்த **கருணை கணபதி.**

14. வள்ளாலன் பக்திக்கு வந்து பாலகனாய்
வரங்கள் அருளிய **வள்ளால கணபதி.**

15. கிருச்சமத முனிவரின் பக்திக்கிரங்கி
ஞானக்கண் தந்த **வரத கணபதி**

16. தேரச்சை சீர் செய்து தந்தைக்குதவி
திரிபுரனை கொல்லச் செய்த **அச்சிறுத்த கணபதி.**

17. பிரணவப் பொருளினை முருகன் சொன்னாற் போல்
தன் சகஸ்ரநாமத்தை தந்தைக்குரைத்த **மகா கணபதி.**

18. பார்வதி சதுர்த்தி விரதமிருந்த தால்
பரமசிவனை மணம் செய்வித்த **சதுர்த்தி கணபதி.**

19. தாருகனை வெல்லும் முன், முருகன் வணங்கவே
முருகனுக்கு மயில் தந்த **இலக்க விநாயகன்.**

20. வள்ளியை அச்சுறுத்த யானையாய் ஓடிவந்து
கந்தன் மணம் முடித்த **ஆபத்சகாய விநாயகன்.**

21. இளமையில் துறவறமும், யௌவனத்தில் இல்லறமும்
தம்பிக்கு தந்த **ஸ்கந்த பூர்வஜன்.**

22. ஆயிரம் பிளவான ஆதிசேஷன் தலையை
ஆயிரம் தலையாக்கிய **தரணீதர கணபதி.**

23. ஆதிசேஷனை உதர பந்தானமாய்
வயிற்றில் கட்டிக் கொண்ட **நாகாபரண கணபதி.**

24. அமிர்தம் அருந்தவும், கிரகமாய் ஒளிவீசவும்
அங்காரகனுக் கருளிய **மங்கள விநாயகன்.**

25. பழித்த சந்திரனுக்குப் பாடம் கற்பித்து
பாதி நிலவணிந்த **பாலசந்திர கணபதி.**

26. அனலனை விழுங்கியபின் உடல் வெப்பம் தணித்த
அருகின் அர்ச்சனைக்குப் பலன் தந்த **மூலாதார கணபதி.**

27. அனைத்து உணவும் உண்டு 'ஆறவில்லை பசி' என்று
ஜனகர் கர்வம் அடக்கிய **ஞானப் பிள்ளையார்.**

28. அன்பு பக்தியுடன் விரோசனை அளித்த அருகை உண்டு
அன்பு பக்திக் கருளிய **பக்தி கணபதி.**

29. அர்ச்சித்த அருகிற்கு, இந்திராதி தேவரும்
ஈடாகார் என்ற **தூர்வாகணபதி.**

30. இரண்யகசிபுவை வெல்ல விஷ்ணு வணங்கவே
நரசிம்மமாய் கொல்லச் செய்த **விஷ்ணு விநாயகன்.**

31. நரசிம்மமாக வந்த விஷ்ணுவின் உக்ரத்தை
தணிக்கச் செய்த **விகட விநாயகன்.**

32. இரண்யாட்சனை கொல்ல திருமால் வணங்கவே
வராகமாய் கொல்லச் செய்த **வராக கணேசர்.**

33. மகாபலியை வெற்றி கொள்ள
திருமாலுக் கருளிய **வாமன கணபதி.**

34. சரஸ்வதியின் சாபத்தால் தேவர் நீராய் மாறவே
தேவரை சுய உருவாக்கிய **ஹேரம்ப விநாயகன்.**

35. கிப்பிரசாதனுக்குப் பரசு ஆயுதமளித்து
'பரசுபாணி' என்றழைத்த **துண்டி விநாயகர்.**

36. கார்த்தவீரியனுக்கு ஆயிரம் கைகளும்
இரண்டு கால்களும் தந்த **பிரவாளவிநாயகர்.**

37. காமதேனுவை அபகரித்தவனின் வம்சத்தை அழிக்க
பரசுராமனுக் கருளிய **ஐங்கர கணபதி.**

38. இராவணன் கைலிங்கத்தை தரையில் வைத்து
கோகர்ணம் தந்தக் **குட்டுப்பட்ட கணபதி.**

39. கமண்டலத்திலே அகத்தியன் காவிரியை அடைக்க
காக்கை உருவிலே கவிழ்ந்த **காவிரி கண்ட கணபதி.**

40. பிரமன் புத்திரன் காஸ்யபரின் தவத்திற்கிரங்கி
சகல ஜீவராசிகளை சிருஷ்டிக்க அருளிய **சந்தான கணபதி.**

41. கபில முனியின் சிந்தாமணியை கணனிடம்
மீட்டுத் தந்த **சிந்தாமணி விநாயகன்.**

42. உமையிடம் மயங்கி சிந்தூரன் சிவனிடம் போரிட
தக்கத் தருணத்தில் உமையை காத்த **தருண கணபதி.**

43. சிந்தூரனை அழிக்க சிரமின்றி பிறந்து,
கஜமுகன் சிரம் கொண்ட **கஜானனர்.**

44. யானை முகத்துடன் மகனாய், வரேண்ய ராஜனுக்குப் பிறந்து,
பராசுவ முனியிடம் வளர்ந்த **இராஜ கணபதி.**

45. சவுபரி முனி சாபம் பெற்ற கிரவுஞ்சனை
வாகனம் ஆக்கிய **மூஷிக வாகன கணபதி.**

46. இந்திரன் ஆணையால் விக்னம் செய்து வந்த
விக்னனை அடக்கிய **விக்னராஜ விநாயகன்.**

47. வேதத்தை மீட்டுத் தர பிரம்மன் ஏகாட்சரம் ஓதவே
பிரமனுக்கு காட்சி தந்த **ஏகாட்சர கணபதி.**

48. யாகத்தில் மயிலைப் பெற்று கமலாசுரனை சங்கரித்து
வேதத்தை மீட்டுத் தந்த **மயூரேச கணபதி.**

49. சித்தியுடன் உதித்த இலாபனின் அன்பை சோதிக்க
தீயில் விழுமுன் தடுத்த **அப்பன் கணபதி.**

50. சிவன் வரம் பெற்ற சிந்துராஜனை அழிக்க
பார்வதியிடம் உதித்த **பால கணபதி.**

51. சுயமாக சுமுதையிடம் அவதரித்து, புகையினால்
தூமாசுரனை கொன்ற **தூமகேது கணபதி.**

52. சிவன் முகத்தில் தோன்றி, ஐந்து முகத்துடன்
திரிபுராதிகளை அழித்த **கணேச விநாயகன்.**

53. சித்திரத்தின் உட்ப்பொருளை உமை சிவனிடம் கேட்க,
களிறும், பிடியுமாய் கலந்துதித்த **பிரணவ கணபதி.**

54. உமையின் சாபத்தால் குருட்டுப் பாம்பான விஷ்ணுவை,
பார்வையால் சுயஉரு பெற செய்த **கணபதி.**

55. சிவன் வரம் பெற்ற கஜமுகாசுரனை,
சிறிய தந்தத்தால் கொன்ற **வீர கணபதி.**

56. அதிதி, காசிபரின் மகனாய் அவதரித்து
மாபெரும் அசுரரை கொன்ற **மகோற்கட கணபதி.**

57. உமையின் முகத்திலே ஐந்து முகத்துடன் தோன்றி,
துராசதனை வென்ற வக்கிர **மூர்த்தி விநாயகன்.**

58. விஷ்ணுவை அந்தணராய் ரிபுஞ்சயனிடம் அனுப்பி,
சிவனிடம் காசி தந்த **உடுண்டி விநாயகன்.**

59. மரீசியின் பக்திக்கு, மழுவுடன் காட்சி தந்து,
மரீசியின் மகளை மணந்த **வல்லப கணபதி.**

60. அகத்தியன் வயிற்றில் சென்று கொல்ல நினைத்த
வாதாபியை ஜீரணிக்க செய்த **வாதாபி கணபதி.**

61. அகிலாண்டே.ஸ்வரியின் கோபம் தணிக்க, அன்னை முன்
ஆதிசங்கரர் அமர்த்திய **பிரசன்ன கணபதி.**

62. அசுரன் அக்னியை நலிவுறச் செய்கையில்
முறக் காதால் விசிறிக் காத்த **சூர்ப்ப கர்ண கணபதி**

63. அரக்கி சுயட்சியை அழிக்க, ஆண் யானைத் தலையும்,
பெண் வடிவும், புலிகால்களுடன் வந்த **வியாக்ர பாதவிநாயகி.**

64. அரசன் கரிகாலனுக்கு ஆபத்து வந்த போது,
அடைக்கலம் தந்த துணை இருந்த விநாயகன்.

65. அன்னைக்கு உதவவே அழிக்க பண்டாசுரனை,
தாய், தந்தை புன்னகையில் உதித்த **கணேஸ்வரன்.**

66. ஆயிரம் தலைகேட்டு ஆயிரமாவது தலையான,
யானைத்தலை வெட்டுப் பட்ட **மூக்கரைப் பிள்ளையார்.**

67. இலங்காதிபதி இராவணனுடன் போரிட்டு சீதையை மீட்டு வர
இராமன் வழிபட்ட **உப்பூர் கணபதி.**

68. இலங்கைக்கு அணை கட்ட இராமனுக்கு யோசனை
சொல்லிக் கொடுத்த **தொண்டி கணபதி.**

69. இராமனை பிரம்மஹத்தி தோஷம் தொடரவே,
தோஷம் நீக்கிய வீரஹத்தி விநாயகன்.

70. ஔவையின் பக்திக்கு தமிழில் தொண்டு செய்ய வைத்து
கயிலைக்கு கூட்டிச் சென்ற பஞ்சாட்சர கணபதி.

71. கடலில் மிதந்து வந்து கனவில் கோவில் கட்ட ஆணையிட்டு.
கடற்கரையில் கோவில் கொண்ட மணற்குள விநாயகன்.

72. கரும்பு விற்பவன் கரும்பு தர மறுக்கவே
கரும்பை கரிக்கச் செய்த கரும்பாயிரம் பிள்ளையார்.

73. சமுத்திரராஜனின் பக்திக்கிரங்கி காவிரியை
மணம் செய்வித்த அபீஷ்ட வரத கணபதி.

74. சியமந்தகமணியால் வந்த பழியினைப் போக்க,
கிருஷ்ணர் பூஜித்த சங்கடஹர கணபதி.

75. சிவன் கோவில் செல்ல, சம்பந்தருக்குப்
பாதை காண்பித்த வழிகாட்டிய விநாயகன்.

76. சிவன் சுந்தருக்குப் போட்ட பொற்காசுகளை
ஆற்றிலிருந்து எண்ணிக் கொடுத்த ஆழத்துப் பிள்ளையார்.

77. சூரியனின் பாவம் போக்கி, பக்தருக்கும் அருளவே
வெயில் பட அமர்ந்த வெயிலுகந்த விநாயகன்.

78. தந்தையின் பரசு ஆயுதத்தை மதித்து கொம்பால்
தாங்கவே ஒரு தந்தம் முறிந்தான ஏகதந்த கணபதி.

79. துக்கோஜி கனவில் வந்து, கோவில் கட்டச் செய்து
ஏகாதச ருத்ரராய் வந்த சேண்பாக்கப் பிள்ளையார்.

80. துர்வாசகர் சாபத்தால் துஷ்யந்தன் சகுந்தலையை மறக்க
சகுந்தலையின் பக்தியால் அவனையே மணம் செய்வித்த
கல்யாண கணபதி

81. நம்பி தந்த உணவை துதிக்கையால் உண்டு
நம்பி வந்த சோழனுக்கு திருமறை காட்டிய விநாயகன்.

82. நவகிரகங்களையும் தன் உடலிலே கொண்டு
கிரக தோஷம் நீக்கிடும் சர்ப்ப விநாயகன்.

83. நாலாயிரம் முனிவர்கள் அஸ்வமேத யாகம் செய்ய
விநாயகரும் சேர்ந்தார் நாலாயிரத்தோர் விநாயகன்.

84. பக்தனுக்குப் பாதை தரச் சொல்லி காவிரியை
வழிவிடச் செய்த ஓலமிட்ட விநாயகன்.

85. பஞ்சம் தீர்க்க படியில் சிவன் வைத்த காசுகளை
தும்பிக்கையால் எடுத்துத்தந்த படிக்காசு விநாயகன்.

86. பஞ்சப் பூதங்களும் தன்னுள் அடக்கிய
ஐம்பூதத் தலைவனான பஞ்ச சக்தி விநாயகன்.

87. பாஞ்ச ஜன்யத்தை சிவகணத்திடம்
மீட்டுத் தந்த அத்திகிரி கணபதி.

88. பட்டீஸ்வரன் கோவிலுக்குப் போகும் வழியிலே
பாரமாகி தனிக் கோவில் கொண்ட ஈச்சனாரி விநாயகன்.

89. பாறையிலே குருதி வரச் செய்து ஊனமுற்றோரின் ஊனம் போக்கி
நீரடி மேல் வந்த காணிப்பாக்கம் பிள்ளையார்.

90. பாற்கடலை கடைகையில் தேவர் விநாயகனை பூஜிக்க
தேவர்க்கு அமிர்தம் தந்த வலம்சூழி விநாயகன்.

91. அமிர்தம் கிடைத்த பின் தேவர் விநாயகனை மறந்ததால்
அமிர்தம் ஒளித்து வைத்த கள்ளவாரணப் பிள்ளையார்.

92. பீமன் தவத்திற்கு 'அஸி' ஆயுதம் வழங்கி
கும்பாசுரனை அழிக்கச் செய்த ஆனைகுட்டே மகா கணபதி.

93. மிளகு கேட்கையில் உளுந்தென பொய் உரைத்ததால்
மெய்யை உரைக்கச் செய்த பொய்யா மொழி விநாயகன்.

94. வாயின் சக்கரத்தை விஷ்ணுவின் தோப்புக்கரணத்தால்
சிரித்து விழவைத்த விகடசக்கர விநாயகன்.

95. விபீஷணனின் அரங்கனை அவனியில் வைத்து
ஸ்ரீரங்கம் தந்த மலைக்கோட்டை உச்சிப்பிள்ளையார்.

96. வினைப் பயனென ஐயப்பனை பிடிக்கச் சென்ற
சனீஸ்வரனை விரட்டி தம்பிக்குதவிய விஜய கணபதி.

97. வேதம் ஓத மறந்த முனிவர்களுக்கு, டமருகம் ஒலித்து வீர
நடனமாடிய சிவனுடன் சேர்ந்து ஆடிய நர்த்தன கணபதி.

98. வேந்தனிட்ட சேந்தனின் விலங்கை அகற்றி
ஏந்தி தும்பிக்கையால் சிறை மீட்ட குஞ்சரமுக கணபதி.

99. ஜாதிக்காயை கடுக்காயென வரி கட்டாததால்
கடுக்காயாய் மாற்றிய கடுக்காய்ப் பிள்ளையார்.

100. நம்பிக்கை கொண்டவருக்கு, தும்பிக்கையால் துணை புரிய
ஐங்கரம் கொண்ட ஓங்கார கணபதி.

101. மஞ்சளில் பூஜித்தாலும், மரத்தடியில் பூஜித்தாலும்,
மகிழ்ந்து உடன் அருளும் க்ஷிப்ரபிரசாதன் கணபதி.

102. குபேரனுக்கு சங்கநிதி, பத்ம நிதி
கிடைக்கச் செய்த லக்ஷ்மி கணபதி.

103. வாக்கு வளம் தந்து பக்தருக்கருளி
பாமாலை பாடவைக்கும் **வித்யா கணபதி**

104. அசுரரிடம் அஞ்சி வந்த, அமரரைக் காத்து,
அசுரரை சங்கரித்த **துர்கா கணபதி.**

105. அற்பனாய் இருந்தவர் உன் பொற்பாதம் பணிந்ததும்
நற்கதி தந்தருளும் **கற்பக விநாயகன்.**

106. விக்னம் தருபவரும், விக்னம் போக்குபவருமாய்
விக்ன விநாயகராய் அமர்ந்த **இரட்டைப்பிள்ளையார்.**

107. இஷ்டமும் உன்னை பணிவோரின் கஷ்டம் தீர்த்து
அஷ்ட ஐஸ்வர்யம் அளிக்கும் **அஷ்ட விநாயகன்.**

108. பக்தியுடன் உன்னை பாடி வரும் பக்தருக்கு
பதினாறு செல்வம் தந்திடும் **சோடச கணபதி.**

அன்புடனே பற்றினால் ஆனைமுகன் தாள்களை,
இன்னல்களை தீர்த்து,ஈன்ற செல்வம் தனை காத்திடுவான்.

உள்ளத்தில் இன்பம் தந்து,ஊன், உறக்கம் சரிவர தந்து,
எண்ணங்கள் நல்லதாய் தந்து,ஏற்றம் வாழ்வில் தந்திடுவான்.

ஐம்புலன்களிலும், ஒரு குறைமில்லாது,
ஓங்காரன் அருளினால்,ஔடதமின்றி வாழச் செய்வான்.

சங்கரன் புதல்வன் அவனின், சன்னதி கண்டாலே, நற்
சந்ததி தந்தருளும் **கற்பக விநாயகன்.**

## 42. ஆனைமுகனின் அருளும் அவர் சூடிய பெயரும் 108ன் கதை

1. சிவபெருமானுக்கு பூதகணங்கள் காவலுக்கு இருப்பது போல, பார்வதி தன் அந்தப்புரத்தை காவல் காக்க, தன் தேகத்து மஞ்சளால் ஒரு மனிதனை செய்து 'கணபதி' என அழைத்தார். மனிதமுகம் கொண்ட அவரே 'நரமுக விநாயகன்'. (சிதம்பரம்)

2. பார்வதியின் அந்தப்புரம் நுழையப் போன சிவனை, கணபதி தடுக்கவே, சண்டையில் சிவன் கணபதியின் தலையை துண்டித்தார். கோபம் கொண்ட பார்வதியை சாந்தம் செய்ய, வடக்கே தலை வைத்துப்படுத்திருந்த யானைத் தலையை வெட்டி, கணபதியின் தலையில் சிவன் பொருத்தவே நரமுக விநாயகனே 'யானை முக விநாயகன்' ஆனார்.

3. சிவன் வரம் பெற்ற கர்வத்தினால் அசுரர் எல்லா உலகினரையும் துன்புறுத்தியதால், அசுரரின் கர்வத்தை அடக்க சிவன், சக்தியின் அம்சமாக உதித்தவர் 'சிவசக்தி கணபதி'.

4. சிவனிடம் நாரதர் தந்த மாம்பழத்தை, உலகை முதலில் வலம் வருபவர்களுக்கு சிவன் தருவதாக சொல்லவே, முருகன் மயில் மீதேறி உலகை சுற்றிவர, கணபதியோ தந்தை! தாயே உலகமென மூஷிகத்தில் ஏறி அவர்களையே வலம் வந்து, கனியைப் பெற்றவரே 'வலம் வந்த கணபதி'.(திருவலம்)

5. வியாசர் சிவன் அருளால் தாமாகவே வேதகாமங்களை அறிந்திருந்தாலும், விநாயகனை நினையாததால் பாடவரவில்லை. பிறகு பிரமன் சொல்லி ஏகாட்சம் ஓதி விநாயகரை தியானிக்க விநாயகர் தோன்றி வாக்குவளம் தந்தவர் 'வர சித்தி கணபதி.'

6. பிரமன் வியாசரை 'உலகம் உய்ய மகாபாரதம் பாடு' என்றதால், பாடும்பாரதத்தை எழுத வியாசர் விநாயகரை வேண்டவே, விநாயகர் ஞானமாகிய தந்தத்தை உடைத்து மேருமலையில் வியாசர் சொல்லியதை வேகமாக எழுதி ஐந்தாம் வேதமான மகாபாரதத்தை தந்தவர் வேத விநாயகன்.

7. கஜாசுரன் வானில் பறக்கையில் ஆகாயகங்கை உடைத்து கொண்டு உலகமே வெள்ளத்தால் முழ்கும் சமயத்தில் ஓங்காரத்தை பிரயோகித்து விநாயகர், ஏழுகடல் நீரையும் ஒரு கிணற்றுள் அடக்கி ஆகாச கங்கையை காத்தருளி, கஜாசுரனை சங்கரித்தவரே கலங்காமல் காத்த விநாயகர்.

8. பிரம்மப்பிரளயம் வந்தபோது, விநாயகர் தன் வயிற்றைப் பெரிதாக்கி, அனைத்துலகங்களையும் வயிற்றுள் வைத்து காப்பாற்றியதால், கனத்தினால் தொங்கும் வயிறு கொண்டவரே 'லம்போதர கணபதி' (லம்போதரன் = தொங்கும் வயிற்றோன்)

9. பிரளயம் முடிந்தபின் வயிற்றிலிருந்த விஷ்ணு, சிவனை இரு செவிகள் வழியாகவும், பிரமனை வளைந்த தும்பிக்கை வழியாகவும் வெளியில் எடுத்து அவரவர் வேலையை செய்ய சொன்னவரே 'வக்ர துண்ட கணபதி' (வக்ரதுண்டம் = வளைந்த தும்பிக்கை)

10. படைக்கும்முன் பிரமன் விநாயகனை நினையாததால், அவர் படைத்த உயிரினம் அவரை பயமுருத்தியது.விநாயகரின் ஏகாட்சரம் ஓதி தியானம் செய்யவே பிரமனுக்கு காட்சிதந்து விக்னம் போக்கி படைக்க அருளியவர் 'விக்னேஸ்வரன்.'

11. பிரமன் தவத்திற்காக விநாயகர் தந்த கிரியாசக்தி, ஞானசக்தியை, தன் மகள்களாய் சித்தி, புத்தி என வளர்த்து விநாயகருக்கு மணம் செய்து தந்தார். சித்தி புத்தியை மணந்தவரே 'சித்தி புத்தி விநாயகன்'. (காரைக்குடி)

12. நித்திரையிலிருந்த விஷ்ணுவின் செவிகளில் தோன்றிய மது, கைடபர் தேவர்களை துன்புறுத்தினார். சிவன் சொற்படி விஷ்ணு, கணபதியின் சடாக்ஷர மந்திரம் ஓதி யுத்தம் செய்து மது, கைடபரை வெல்ல அருளியவர் 'சித்தி கணபதி.' (சித்தடேக்)

13. வல்லவன், கமலை தம்பதிகளுக்கு குருடு, செவிடு, ஊமையாகவும், தொழுநோயுடன் பிறந்த தக்கனை குணப்படுத்த முடியாது மன்னன் வனத்திற்கு அனுப்பவே கமலையும் மகனுடன் சென்றாள்.எதிரே வந்த முற்கலமுனி காற்றால் பிணி நீங்கியது. விநாயகரின் சடாஷர மந்திரத்தை இருவரும் தியானித்ததால் கருணை கொண்ட கணபதி காட்சி தந்து'முற்கலமுனி போல் காட்சி தந்து பிணி நீக்கியது நானே' என்றவர்'கருணை கணபதி.'

14. வள்ளாலன் என்ற சிறுவன் தோப்பில் இருந்த பாராங்கல்லை விநாயகராய் பாவித்து நண்பர்களுடன் பூஜை செய்து வந்தான். ஒரு நாள் வெகு நேரமாகியும் குழந்தைகளை காணாத பெற்றோர் வள்ளாலனின் தந்தையிடம் சொல்லவே, தந்தை கல்யாணம் கோபத்துடன் போய் பூஜையை கலைத்து வள்ளாலனை அடித்து மரத்தில் கட்டினான். வள்ளாலன் இறக்க நினைக்கையில் விநாயகர் பாலனாக வந்து கட்டுகளை அவிழ்த்து ரணங்களை சரியாக்கி வரங்களை அருளி அவன் பெயருடன் தன் பெயரும் சேர்த்து ஆனவர் 'வள்ளால கணபதி'. (பாலி)

15. சூரன் என்ற அரசன் சபையில் கிருச்சமதமுனியுடன் வாதாட முடியாமல் போன அத்திரிமுனி 'நீ கவிமகாமுனிக்கு பிறந்தவன் அல்ல. ருக்மாங்கதனுக்கு பிறந்தாய்' என இழிவு செய்யவே தாயிடம் கேட்டு உண்மை தெரிந்து உயிர்துறக்கப்போகும் போது அசரீரி 'தேவேந்திரனின் குமாரன் நீ' என்றது. தன்னை யாவரும் போற்றும் படி விநாயகரை வேண்டவே மிகுந்த பிரகாசத்துடன் காட்சிதந்த விநாயகரை பார்க்க ஞானக்கண் கேட்டதால் அருளியவர்'வரதகணபதி.' (காஞ்சிபுரம்)

16. திரிபுராசுரனுடன் போரிடும் முன் சிவன் விநாயகரை நினையாததால் தேரச்சு முறிந்தது. பிறகு விநாயகரை நினைக்கவே விநாயகர் தோன்றி தேரச்சை சீர் செய்து திரிபுரனை அழிக்க தந்தைக்குதவியர் 'அச்சிறுத்த கணபதி.' (அச்சரப் பாக்கம்)

17. கணேசர் அருளால் மூன்று உலகங்களையும் வென்று திரிபுரன் அனைவரையும் துன்புறுத்தவே சிவன் அமரரை காக்க போரிட சென்றார். தடங்கள் நீங்க கணேசரை தியானிக்கவே சிவன் முகத்திலிருந்து 5 முகங்கள், 10 கைகளுடன் தோன்றினார் மகாகணபதி. பிரணவப் பொருளை முருகன் சொன்னாற்போல், தன்சகஸ்ர நாமத்தை தந்தைக்கு சொன்னார் 'மகா கணபதி.' (ரஞ்சன்காவ்)

18. தட்சனுக்கு மகளாக பிறந்த தாட்சாயணி, தட்சன் தன் பதி சிவனையாகத்திற்கு அழைக்காது, அவமானம் செய்ததால் தட்சனுக்கு மகளாய் பிறந்தேனே என வருந்தி யோகாக்கினியில் விழுந்தாள்.பிறகு பர்வதராஜனுக்கு மகளாக பிறந்து, சதுர்த்தி விரதம் இருந்து சிவனை மணம் புரிய செய்தவர் சதுர்த்தி கணபதி.

19.தாருகாசுரனுடன் போரிடும் முன், முருகன் விநாயகரை வணங்கவே, தன் மயில்வாகனத்தை தந்து, அசுரனை வெல்ல ஆசிவழங்கியவர் 'இலக்க விநாயகன்.'

20. வள்ளியை வசப்படுத்த முருகன் வேடனாகி, மரமாகி, கிழவராகியும் முடியாததால், விநாயகரை வேண்டவே யானையாக வந்த விநாயகரிடம் அஞ்சிய வள்ளி கிழவராக வந்த முருகனிடம் தஞ்சம் புக,முருகன் சுய உருகாட்டி வள்ளியை மணக்க உதவியவர் 'ஆபத் சகாயவிநாயகர்' (திருத்தணி)

21. மாங்கனிக்கான போட்டியில் முருகன் தோல்வியுற்று சிறுவயதிலேயே கோபத்துடன் பழநி மலை மேல் ஆண்டியாய் நின்றதற்கும் யானையாய் வந்து யௌவன பருவத்தில் முருகனுக்கு வள்ளியை மணம் செய்விக்கவும் காரணமாயிருந்தவர் கந்தனின் அண்ணனான 'ஸ்கந்த பூர்வஜன்'.

22. சிவனை வணங்குபவர், தன்னையும் வணங்குவதாக, கர்வம் கொண்ட ஆதிசேஷனை சிவன் கோபத்தினால் வீசி எறியவே ஆதிசேஷன் தலை 1000 பிளவையும்,1000 தலையாக்கியவர்'தரணி தர கணபதி.'

23. 1000 தலையுடன் பூமியை தாங்கவும், 5 தலையுடன் சிவன் மகுடத்தில் இருக்கவும், அப்படியே ஆதிசேஷனை தான் உதரபந்தானமாய் வயிற்றில் கட்டிக் கொண்டவரும், நாகங்களை ஆபரணமாக அணிந்தவருமே 'நாகாபரண கணபதி.'(நாகபட்டினம்)

24. முதன் முதலில் சங்கடஹரசதுர்த்தி விரதம் இருந்த அங்காரகன் விநாயகனை வேண்டவே, தேவருடன் கூடி அமிர்தம் அருந்தவும், கிரகங்கள் போல் ஒளிவீசவும் செய்து, மங்களன் என்ற பெயரும் தந்தவர் 'மங்கள விநாயகன்'

25. விநாயகர் அனைத்து நிவேதனத்தையும் ஒரே கவளமாக உண்பதை கண்ட சந்திரன் சிரிக்கவே, கோபம் கொண்ட விநாயகர், சந்திரனை ஒளி இழக்க சபித்தார். பிறகு சந்திரன் விநாயகரின் ஏகாட்சரம் ஜபிக்கவே சந்திரனின் சாபம் போக்கி, ஒளி வீச செய்து, தலைமுன் மதியை அணிந்தவரே 'பால சந்திர கணபதி.'

26. யமன் மகன் அனலாசுரன் விழுங்க வருவதை கண்ட தேவர்கள் விநாயகனை பணியவே, அருகில் வந்த அனலாசுரனை கணபதி விழுங்கவே உடல் முழுவதும் வெப்பம் பரவியது. எண்ணாயிரம் முனிவர்கள் ஒவ்வொருவரும் 21 அருகம்புல்லை இட்டு வைத்திருந்த நீரால் அபிஷேகம் செய்யவே உடல் வெப்பம் தணிந்தவரே'மூலாதார கணபதி.' (திருவாரூர்)

27. நாரதரிடம் 'அஹம்பிரம்மம்' என்று சொன்ன ஜனகரின் கர்வத்தை அடக்கவிநாயகர், ஏழை அந்தணராக ஜனகரிடம் சென்று பசிக்கு உணவு கேட்டு, சமைத்து, சமைக்காத என அனைத்துணவையும் உண்டும் 'ஆறவில்லை பசி' என்றார். இதை கேட்ட ஜனகர் 'அனைத்தையும் உண்டபின் தர வேறு ஏதுமில்லை. வேறிடம் போய் பசி ஆறும்' என்றார். 'அகமே பிரம்மம் என்றால் நீயே உணவு படைத்து தரலாம், இல்லை என்றால் நீ எப்படி தன்னை பிரம்மம் ' என சொல்லலாம் என கேட்டு ஜனகரின் கர்வத்தை அடக்கினார். வந்தவர் விநாயகரென அறிந்த ஜனகர், மன்னிப்பு கேட்டபின் மன்னித்து ஞானோபதேசம் செய்தவர் 'ஞானப்பிள்ளையார்.'

28. அனைத்துணவையும் ஜனகரின் அரண்மனையில் உண்டும் பசிஆறாத கணபதி, தன் பக்தன் ஏழை திரிசுரன், மனைவி விரோசனை இல்லம் சென்று உணவு கேட்டார். மன்னனாலேயே தீர்க்க முடியாத பசியை ஏழை நாம் எப்படி தீர்ப்போம் என நினைத்து, தினம் விநாயகரை அர்ச்சிக்கும் அருகு ஒன்றை கணபதிக்கு தரவே, பசி தீர்ந்தது. கூரைவீட்டை மாளிகையாய் செய்து உண்மை பக்திக்கு அருள்பவரே'பக்தி கணபதி.'

29. கவுண்டின்ய முனி, மனைவி ஆசிரியைக்கு அருகின் பெருமையை உணர்த்த விநாயகரை அர்ச்சித்த அருகம்புல் ஒன்றுக்கு

ஈடான தங்கத்தை இந்திரனிடமிருந்து வாங்கிவரச் சொன்னார். இந்திரனிடம் பொன் கேட்க சென்ற ஆசிரியை கண்டு குபேரன் 'அருகின் நிறைக்கா பொன் வாங்க வந்தீர்கள்'என அலட்சியமாய் கேட்டு தராசின் ஒரு தட்டில் அருகம்புல்லை வைத்து, மறு தட்டில் நவநிதிகளுடன் அனைத்து தேவர்கள் ஏறியும் தராசுதட்டு சமன் ஆகவில்லை. பிறகு சிவனுடன் அனைத்து அமரரும் கவுண்டின் யமுனியிடம் சென்று விநாயகரை அர்ச்சித்த அருகிற்கு மூவுலகமும் ஈடாகாது என சொல்லி சகல செல்வமும் தந்தருளினார்.

தூர்வா = அருகம்புல், அருகால் அர்ச்சிக்கப்படுபவரும், அருகிற்கு மகிமைதந்தவருமே 'தூர்வா கணபதி.'

30. வன்னி மரத்தடியில் விநாயகனை பிரதிஷ்டை செய்து, விஷ்ணு சடாஷர மந்திரம் ஜபிக்க விநாயகர் தோன்றினார். இரண்யகசிபுவை வெல்ல விஷ்ணு உபாயம் கேட்கவே'நரசிம்மமாக அந்தி நேரத்தில், வாயிற்படியில், உன் தொடையில் அசுரனை கிடத்தி, நகத்தால் மார்பை பிளந்து, ரத்தத்தை உறிஞ்சிவிட உனக்கு வலிமை தந்தோம்' என விநாயகர் கூறி மறைந்தார். விஷ்ணு வழிபட்டவரும். விஷ்ணுவிற்கு அருளியவரும் விஷ்ணு விநாயகன்.

31. பிரகலாதனின் பக்திக்கிரங்கிய விஷ்ணு, நரசிம்மமாக அவதாரம் எடுத்து, இரண்யனை வதம் செய்தபின், அவரது கோபத்தை அடக்கி, சிரிக்க வைக்க விகடம் செய்து உக்ரத்தை தணித்தவர் விகட விநாயகன்.

32. பூமியை கடலின் அடியில் அழுத்தி வைத்து இடர் புரிந்த இரண்யாட்சனை கொல்லும் முன் திருமால் விநாயகனை வணங்க திருமாலை வராகமாய் சென்று இரண்யாட்சனை கொன்று, பூமியை மேலே கொண்டு வரச் செய்தவர் வராக கணேசர்.

33. 100 அஸ்வமேத யாகம் செய்து இந்திரனுக்கு சமமான பதவி பெற ஆசைப்பட்டு, மகாபலி 99 அஸ்வமேத யாகம் செய்து முடித்தார். இதைக்கண்ட இந்திரன் திருமாலை வேண்ட, திருமால் அதிதி, காசிபரின் மகனாக வாமனராகப் பிறந்து, விநாயகரிடம் மகாபலியை அடக்கும் உபாயம் கேட்க 'மகாபலியை அடக்கும் வழி தானத்தால்தான்' என விநாயகர் சொல்ல, வாமன ரூபமாக வந்து விஷ்ணு 3 அடி நிலம் தானமாக கேட்டு, விஷ்ணு விண்ணையும் மண்ணையும் ஈரடியாக அளந்து, மூன்றாவது அடியை மகாபலியின் தலையில் வைத்து பாதாள உலகில் அழுத்தினார். விஷ்ணு வாமனராய் வழிபட்ட விநாயகர் வாமன கணபதி.

34. சிவனை குறித்து யாகம் செய்ய பிரமன் தன் ஒரு மனைவி காயத்திரியை அழைத்துச் சென்றது கண்டு, மற்றொரு மனைவி சரஸ்வதி கோபம் கொண்டு யாகசாலைக்கு வந்த தேவரை தண்ணீராகப் போகும்படி சபித்தாள். விநாயகரை தியானிக்காததால் தான் தடங்கல் என்று சிவன் சொல்லவே, மந்தார மரத்தடி விநாயகரை பூஜித்ததால் அமரரை சுய உரு பெற செய்தவர் ஹேரம்பவிநாயகன். (திருவொற்றியூர்)

35. கணவரின் அன்பை பெற கீர்த்தி விநாயகனை அருகம்புல்லால் அர்ச்சிக்கையில் கடைசி நாளன்றுஅருகம்புல் இல்லாததால் வன்னி இலையால் பூஜித்தாள். அருகம்புல்லிற்கு பதில் வன்னி இலையால் பூஜித்தது தவறோ என நினைத்து தூங்கும்போது, கனவில் கணபதி தோன்றி 'வன்னி என் சென்னியில் அழகு  செய்கிறது'என சொல்லி, கணவரின் அன்பை பெறவும், மகன் பிறக்கவும் ஆசி வழங்கவே, க்ஷிப்ர பிரசாதனன் மகனாக பிறந்தான். அவன் விநாயகரின் நாலெழுத்து மந்திரத்தால் தவம் செய்து வேண்டவே பரசு ஆயுதமளித்து,'பரசுபாணி' என்ற பெயரும் தந்து அருளியவர் 'துண்டி விநாயகன்.'

36. கிருத வீரியன், சுகந்தை தம்பதிகளுக்கு, கார்த்த வீரியன் என்ற மகன், கை, கால்கள் இல்லாத முடமாகப் பிறந்தான். 12 ஆண்டுகளுக்குப் பின் தத்தாத்ரேயர் உபதேசித்த விநாயக மந்திரம் ஓதி, விநாயகரை நோக்கி தவமிருந்து,கார்த்த வீரியன் 2 கால்களும், 1000 கைகளும் அதற்கான அருளும் பெற்றான். கார்த்த வீரியன் வழிபட்டு, அருளியவர்'ப்ரவாளவிநாயகர்.'

37. ஜமதக்னி முனிவர் தன் ஆசிரமத்திற்கு படையுடன் வந்த, கார்த்த வீரியனுக்கு காமதேனுவின் உதவியால் உணவு அளித்தார். காமதேனுவை அடைய விரும்பி, தர மறுத்த ஜமத்கனி முனிவரின் தலையை வெட்டி, முனி பத்தினியையும் காயமடையச் செய்ததை கண்ட அவர்கள் மகன் இராமன், தந்தையை கொன்றவனை 21 தலைமுறை கொல்ல சபதம் செய்து, விநாயகரை வேண்டி தவம் செய்ததால் பரசுவை தந்து பரசுராமன் என்ற பெயரும் தந்து கேட்ட வரம் அளித்தவர் 'ஐங்கரகணபதி.'

38. சிவனிடமிருந்து இராவணன் பெற்ற ஆத்மலிங்கத்தை இலங்கைக்கு எடுத்துச் செல்லாது தடுக்க தேவர்கள், விநாயகரை வேண்டவே, விநாயகர் பிராமண சிறுவனாக இராவணன் முன் தோன்றி, இராவணனுக்கு சிறுநீர் உபாதையை உண்டாக்கவே, இராவணன் சிறுவனிடம் லிங்கத்தைக் கொடுத்து தரையில் வைக்காமல் கையில் பிடித்திருக்கும் படி சொல்லி, சிறுநீர் கழிக்க சென்று,  இராவணன்

திரும்பும் முன்னேயே சிறுவன் லிங்கத்தை தரையில் வைத்தான். இராவணணால் லிங்கத்தை எடுக்க முடியாமல் போன கோபத்தினால், சிறுவனாக வந்தவர் வினாயகனென அறியாது தலையில் குட்டினான். இராவணனிடம் குட்டுப்பட்டவர் 'குட்டுப்பட்ட கணபதி.' (மகாபலேஷ்வர்)

39. கைலாசநாதர் அளித்த காவிரியை அகத்தியன் கமண்டலத்தில் அடக்கி, பொதிய மலைக்கு வந்தார். இந்திரனின் நந்தவனத்திற்கு தண்ணீரில்லாமல் அசுரன் செய்ததால், இந்திரன் தண்ணீர் வேண்டி விநாயகரை வேண்டவே, விநாயகர் காகமாய் வந்து அகத்தியரின் கமண்டல நீரை கவிழ்த்து இந்திரனின் நந்தவனத்திற்கு காவிரி பாய வைத்தவர் 'காவிரி கண்ட கணபதி.' (கொடுமுடி)

40. பிரளயத்தின் இறுதியில் பிரமன் மனதிலிருந்து படைத்த ஏழு புத்திரர்களுள் ஒருவர் காஸ்யபர். அவர் பிரமன் சொற்படி விநாயகரின் ஏகாட்சர மந்திரம் ஓத விநாயகர் தோன்றி படைக்கும் ஆற்றல் தந்து அருளியவர் சந்தான கணபதி.

41. இந்திரன் தந்த சிந்தாமணியால், கணன், அவன் படைகளுக்கு கபிலர் உணவளித்தார். அதைக்கண்ட கணன் கபிலரிடமிருந்து சிந்தாமணியை அபகரிக்க, சிந்தாமணியைப் பெற கபிலர் விநாயகரை வேண்ட, போரிட வந்த கணன் படைகளுடன் விநாயகர் போரிட்டு சிந்தாமணியை மீட்டு கபிலரிடம் தந்தார். சிந்தாமணியை மீட்டவரும் சிந்தாமணியை தரித்தவருமே 'சிந்தாமணி விநாயகன்.'(தேவூர்)

42. பிரமன் கொட்டாவியில் பிறந்த சிந்தூரன் யாரை அணைத்தாலும் அவர்கள் சாம்பலாகும் வரம் பெற்றதால் அனைவரையும் துன்புறுத்தினான் உமையிடம் மயங்கிய சிந்தூரன், சிவனுடன் சண்டை இட்டு அவரை அணைக்க வரும்போது, விநாயகர் சிறுவனாக வந்து இருவருக்கும் நடுவில் பரசுவை நட்டார். சிவனை அணைக்க வந்த போது, பரசு மேலெழும்பி சிந்தூரனை விரட்டி பூவுலகம் அனுப்பியது. பையனாக தக்கத் தருணத்தில் வந்து உமையை காத்தவர் 'தருண கணபதி.'

43. சிந்தூரனை அழிக்கப் போகும் விநாயகர், பார்வதியின் வயிற்றில் வளர்வது தெரிந்து சிந்தூரன் வாயுரூபமாய் பார்வதியின் வயிற்றில் சென்று சிரத்தை துண்டித்து நர்மதையில் எறிந்தான். நாரதர் சாபத்தால் சிவபக்தனான மயேச்சுத மன்னன் கஜமுக அசுரனாக பிறந்து சிவன், பார்வதி தங்கிய பரியலி மண்டபத்தை முட்டித் தள்ள, கோபம் கொண்ட சிவன் சூலத்தால் சிரசை துண்டித்தபோது, 'அசுரன் சிவாயநம' என்றதால் சிவ பக்தனான அசுரனின் யானைத் தலையை

சிவன் தன் அருகில் வைத்துக் கொண்டார். தலையில்லாமல் பிறந்த குழந்தை நம்மை எப்படி காப்பாற்றும் என அமரர் நினைக்கையில் கஜமுகாசுரன் சிரத்தைப் பொருத்தச் சொல்லி கஜானனர் ஆனார்.

44. காலநேமியை அடக்க அரசன் வரேண்யனின் மனைவி புஷ்பகைக்கு பிறந்த ஆண் குழந்தையை மறைத்து தானே அங்கு குழந்தையாக நான்கு கரங்கள், தும்பிக்கைமுகம், பெருத்த தொந்தியுடன் காட்சி அளித்தார். விசித்திரமான அக்குழந்தையை அரசன் ஆணைப்படி வனத்தில் விட அருகில் ஆசிரமத்திலிருந்து வந்த பராசுவமுனிவர், அக்குழந்தையை எடுத்து வளர்த்தார். வரேண்ய அரசனுக்கு மகனாக பிறந்தவர்'ராஜ கணபதி.'

45.கந்தர்வனான கிரவுஞ்சன் காமத்தால் சவுபரிமுனி பத்தினியின் கையைப் பற்றி இழுக்க, அதை கண்ட முனிவர் மூஷிகமாகும்படி சபித்தார். மூஷிகமான கிரவுஞ்சன் பராசுவ முனிவர் ஆசிரமத்தில் தொல்லை கொடுத்த போது, விநாயகர் பாசாயுதத்தால் இழுத்து வரச்செய்து, சரணடைந்த கிரவுஞ்சனை மன்னித்து மூஷிகத்தை வாகனம் ஆக்கிக் கொண்டவர் 'மூஷிக வாகன கணபதி.'

46. அபிநந்தனின் யாகத்தை அழிக்க, இந்திரனால் ஏவப்பட்ட காலநேமி பூவுலகில் யாகம் நடக்காது விக்னங்கள் செய்து வந்தான். அவனை சங்கரித்து தங்களை காப்பாற்ற வேண்டுமென பராசுவ முனிவர் விநாயகரை வேண்ட, விநாயகர் அங்குசத்தால் கால நேமியை கட்டி இழுத்து வரச் செய்து அவன் மேல் வேலை ஏவினார். கால நேமி விநாயகரை சரணடைய தன் பக்தர்களுக்கு தொல்லைகள் கொடுக்க கூடாது என்று கூறினார். விக்னங்கள் செய்து வந்த, காலநேமியை அடக்கியவரும், விக்னம் தீர்ப்பவருமே 'விக்னராஜ விநாயகன்.'(ஔசர்)

47. தேவாசுர யுத்தத்தின் போது தேவர்கள் வேதங்களை ஆயுதங்களாக பிரயோகித்ததால், பிரமன் தியானத்தில் இருந்த போது கமலாசுரன் திருடிவந்த வேதங்களை சங்காசுரன் கடலினடியில் ஒளித்து வைத்தான் . கண்விழித்த பிரமன் வேதங்களை காணாது விநாயகரை ஏகாட்சர மந்திரத்தால் ஜபிக்கவே, காட்சி தந்து அருளியவர் 'ஏகாட்சர கணபதி.'

48. சுந்தர ஆசிரமத்தில் மல்லாலராக வந்து, விநாயகர் வேதம் உபதேசித்து தர்மத்தை தழைக்கச்செய்தார். அதனால் நால்வகை படைகள் உடன் அசுரசேனைகள் போரிட வந்தபோது விநாயகர் ஏராளமான வீரர்களை உண்டாக்கி மாலை வரை போர் புரிந்தனர். அசுரர்கள் வாகனத்தில் ஏறி போர் புரிவதால், மல்லாலரும் வாகனத்தில் ஏறி போர் புரியும் படிகார்க்கிய முனிவர் சொல்ல, யாகம் வளர்த்து

அதிலிருந்து மயிலைப் பெற்று, மயில் மீதேறி கமலாசுரனை சங்கரித்து வேதத்தை மீட்டுத் தந்தவர்'மயூரேச கணபதி.' (மோர்காவ்)

49. புத்தி தேவி கமலாசுரனுடன் போரிடும் போது, கோபத்தில் இருந்து தோன்றிய வீரன் இலாபனிடம், அவனது தந்தை 'மயூரேச கணபதி' என்றாள். தந்தையுடன், இலாபனும் அசுரருடன் போரிடும் போது, அசுரனின் மோகனாஸ்த்திரத்திற்கு லாபன் மாத்திரம், கட்டுப்படவில்லை. கை தளர்ந்து கமலாசுரன் திரும்பி போன பின், ஆறு நாட்களாக விநாயகரும் மோகனாஸ்த்திரத்தில் கட்டுண்டதை கண்டு திடுக்கிட்டு, விநாயகரின் திருவிளையாடலை உலகினருக்கு காட்ட, அக்கினி வளர்த்து அதை 3 முறை வலம் வந்து குதிக்க போன போது, 'மகனே உன் அன்பை சோதிக்க நான் நடித்தேன்' என்றார் இலாபனின் தந்தையான 'அப்பன் கணபதி.'

50. சிவன் வரம் பெற்ற சிந்துராஜன், தேவர்களை சிறையிலிட தேவர்கள் சதுர்த்தி விரதமிருந்து வேண்டவே, விநாயகர் தோன்றி'சிந்து ராஜனை சங்கரித்து உங்களை காப்போம்' என்றார். திரிசந்தி ஷேத்திரத்தில் கௌதமர் முதலிய முனிவர்கள் சிவனை நோக்கி தவம் செய்து, சிந்துவிடமிருந்து காப்பாற்ற வேண்டவே, சிவன் சொல்லி பார்வதிமயூரேச விநாயகர் ஆலயத்தில் 12 வருடங்கள் தியானிக்க, விநாயக சதுர்த்தி அன்று பால விநாயகராய் பார்வதியிடம் உதித்து சிந்து ராஜனை அழித்தவர்'பால கணபதி.'

51. மழலை வேண்டி சுமுதை வனத்தில் திருமாலை நோக்கித் தவம் செய்ய, திருமால் வடிவில் கணேசர் பஞ்சாயுத பாணியாக காட்சி அளித்து 'நானே உனக்கு மகனாய்ப் பிறப்போம்' எனக் கூறி மறைந்தார். தூமாசுரனைக் கொல்ல திருமாலே சுமுதை வயிற்றில் கருவாகி வளர்கிறார் என்ற அசரீரி கேட்ட தூமாசுரன் சுமுதையையும் அவள் கணவரையும் கொல்ல நினைத்த போது விநாயகர் பாதுகாத்தார். விநாயகரை கொல்ல தூமாசுரன் புகையை கக்கவே, அந்தப் புகையை விநாயகர் விழுங்கி, திரும்பி அதை விஷப்புகையாக வெளியிட்டு தூமாசுரனை கொன்றவர் 'தூமகேது கணபதி'(தூமம்=புகை) (திருநீர் மலை)

52. விநாயகரிடம் வரம் பெற்ற திரிபுரன் தேவர்களை துன்புறுத்த, தேவர்கள் சிவனிடம் முறையிட, சிவன் விநாயகரை தியானிக்கையில், சிவன் முகத்திலிருந்து 5 முகங்களுடன் தோன்றி திரிபுராதிகளை அழிக்க அருளியவர் கணேசவிநாயகன்.

53. கயிலையில் சிவனும், உமையும் ஒரு மண்டபத்தில் பிரணவாகாரம் என்னும் ஓவியத்தை உற்று நோக்க,சிவனின் எழுத்தான

அகரம் ஆண்யானையாகவும்,உமையின் எழுத்து ஆன உகரம் பெண்யானையாகவும் ஆகி, இரு யானைகளும் கூடி இளங்கன்றாய் உதித்தவர் பிரணவ கணபதி.

54. சிவனும் உமையும் சொக்கட்டான் ஆடும்போது விஷ்ணுவை சாட்சியாக வைத்து ஆட ஆரம்பித்தனர். ஆட்டத்தில் உமாதேவி ஜெயித்தாலும், சிவன் ஜெயித்ததாக விஷ்ணு பொய்சாட்சி சொல்லவே, கோபம் கொண்ட உமை குருட்டுப் பாம்பாய் காட்டில் திரியும்படி சாபமிட்டாள். சாபத்திற்கு விமோசனம் விஷ்ணு சிவனிடம் கேட்டு 'வடதீவினையில் மலைப்பாம்பாய் இருந்து சிவனை தியானிக்க' கஜமுகாசுரனை வென்று விநாயகர் அங்கு வந்தபோது மகாவிஷ்ணுவை சுயரூபம் அடையச் செய்தவர்'கணபதி.'

55. தேவர்களாலோ, மனிதர்களாலோ, பிராணிகளாலோ, ஆயுதங்களாலோ மரண மடைய மாட்டான். என சிவனிடம் வரம் பெற்ற கஜமுகாசுரன் தேவர்களை கொடுமைபடுத்தினான். தேவர்கள் விநாயகரை வேண்ட, விநாயகர் அசலன் என்ற பூதவீரனின் முதுகில் அமர்ந்து, படையுடன் சென்று போரிட்டு தன் தந்தத்தை உடைத்து வீசி கஜமுகாசுரனை வீழ்த்தியவர் 'வீரகணபதி.'

56. சிவன் வரம் பெற்ற அசுரர் தேவாந்தகன், நராந்தகன் தேவர்களை கொடுமைப்படுத்துவதைக்கண்ட தேவமாதா அதிதி, அசுரனை அழிக்க ஒருமகனை வேண்டி , கணவர் காசிபரின் சொற்படி விநாயகரின் பஞ்சாட்சர மந்திரத்தை தியானிக்க விநாயகர் மகனாய் பிறந்தார். மகோற்கடர் என பெயர் சூடி வளர்ந்து தேவாந்தகன், நராந்தகன் போன்ற மாபெரும் அசுரரைக் கொன்றவர் 'மகோற்கட கணபதி.'

57. சிவனிடம் வரம்பெற்ற துராசதன் மூவுலகங்களையும் கீழ்ப்படிய செய்தார். மும்மூர்த்திகளும் காசியிலிருந்து கேதாரம் சென்ற போது, காசியையும் அடிமைப்படுத்தி, தேவர்களுக்கு அவிர்பாகம் இல்லாது செய்தான். பிரமன் சொல்லி தேவர் உமையிடம் முறையிட, உமையின் முகத்தில் ஐந்து யானை முகங்களுடன், சிங்க வாகனத்தில் விநாயகர் தோன்றி, துராசதனை வெல்ல விஸ்வரூபமெடுத்து,தனது திருவடியை அசுரன் தலையில் வைத்து அழுத்தி காசியின் மேற்கு வாசலில் அமர்ந்தவர் **'வக்கிரமூர்த்தி விநாயகன்.'** (காசி)

58. மரீசியின் தவத்திற்கு சிவன் அமரருடன் காசிவிட்டு மந்தரிகிரி சென்றபோது, அமரர் இல்லாததால் காசியில் அரசன் ரிபுஞ்சயன் ஆட்சிப் பொறுப்பேற்றான்.பிறகு சிவன் காசி வர நினைத்தும் முடியாததால் விநாயகரிடம் சொல்ல,விநாயகர் சோதிட சிறுவனாக சென்றார் காசிக்கு.

ரிபுஞ்சயனிடம் எதிர்காலம் பற்றி 17ம் நாள் வரும் அந்தணர் சொல்வார் என கூறிச் சென்று, மாறு வேடத்தில் விஷ்ணுவையும் லக்ஷ்மியையும் காசிக்கு அனுப்பி, அனாசாரத்தை பரப்ப செய்து, 17ம் நாள் விஷ்ணு அந்தணராக அரண்மனைக்கு சென்றபோது, யோக பலத்தால் ரிபுஞ்சயன் வந்திருப்பவர் விஷ்ணு என்றும், அதற்கு முன் வந்தவர் விநாயகர் என்றும் அறிந்து சொல்லி தவறுக்கு மன்னிப்பு கேட்டு காசியை விசுவநாதருக்கு தந்தான். அமரரை திரும்ப காசி வர செய்தவர் **'உடுண்டி விநாயகன்'**. (காசி)

59. மரீசிமுனியின் தவத்திற்கு மழுவுடன் காட்சி தந்த விநாயகரிடம் மரீசிமுனி'சக்தியே தனக்கு மகளாக பிறக்கவும், தம் மகளை விநாயகருக்கு மணம் செய்து கொடுக்க' வரம் கேட்டதை விநாயகர் அருளினார். யமுனை நதியில் தாமரையில் சங்கு வடிவில் சக்தி ஒரு குழந்தையாக வீற்றிருந்தாள். மரீசி அக்குழந்தைக்கு வல்லபை என பெயர் சூட்டி வளர்த்தார். வல்லபை சிவனை நோக்கி தவமிருக்க, அந்தணர் உருவில் வந்து சிவன் பிறகு தன் சுயரூபம் காட்டி விநாயகராக வந்து வல்லபையை மணந்தவர் **'வல்லப கணபதி.'**

60. வாதாபி, இல்வளவன் இருவரும் பிராமண வேடம்பூண்டு ரிஷிகளை தன் வீட்டில் போஜனம் செய்ய அழைத்து வாதாபியை வெட்டி கரியாக சமைத்துப் போட்டு ரிஷி உண்டபின் தம்பியை'வாதாபி வெளியே வா' என்றதும், வாதாபி ஆடுரூபத்தில் ரிஷியின் வயிற்றை கிழித்துக் கொண்டு வந்தபின் இருவரும் இறந்த ரிஷியின் மாமிசத்தை புசிப்பர்.இதுபோல் அகஸ்தியரை அழைத்து போஜன உபசரிப்பு முடிந்த பின் வாதாபியை இல்வளவன் அழைத்தான். அசுரனின் கபடத்தை விநாயகர் அகத்தியருக்கு புரியச்செய்து, தப்பிக்கும் உபாயமும் முன்பே அனுக்கிரக்கித்ததால் அகஸ்தியர் தொப்பையை தடவி'வாதாபி ஜீரணோபவ' என்று முன்பே சொன்னதால் வாதாபி ஜீரணமாகி விட்டான். வாதாபியை ஜீரணம் செய்தவரே **வாதாபி கணபதி.** (திருச்செங்காட்டன்குடி)

61. திருவானைக்காவல் அன்னை அகிலாண்டேஸ்வரி முதலில் காபாலிகர் வழிபாட்டினால் உக்ரகமாக இருந்தார். உக்ரத்தை தணிக்க ஆதிசங்கரர் விநாயகரை நினைத்து அன்னைமுன் செல்லமகனை ஸ்தாபனம் செய்து, அன்னைக்கு தாடங்கமும் அணிவிக்கவே அன்னையின் கோபம் தணிந்தது செல்லமகனான **பிரசன்ன கணபதி**யால்.(திருவானைக்காவல்)

62. அக்னி நலிவுறும்படி சாபம் பெற்றபோது, அந்த சாபத்தை நீக்க விநாயகர் தம் இரண்டு முறக்காதுகளினால் விசிறி, விசிறி சூடு

குறையாது காத்தவரே சூர்ப்பகர்ண கணபதி (சூர்ப்பகர்ண= முறம் போன்ற காது)

63. அரக்கி சுயட்சை யானையாய் மாறி, அமரரை துன்புறுத்தவே அமரர் இறைவனை வேண்ட, அதன்படி 'சுயட்சையின் அமைப்புக்கு எதிர்மறையும், நேர்மறையும் கலந்த வடிவும் உள்ளவரால்தான் அவளுக்கு அழிவு' என்றார். அமரர் விநாயகரை வணங்கவே 'விநாயகர்' பெண்வடிவும், ஆண்யானைத் தலையும், புலிகால்களுடன் தோன்றி சுயட்சையை அழித்து அமரரை காத்தவரே வியாக்ரபாத விநாயகி. (மதுரை)

64. அரசன் கரிகாலனின் இளம் வயதில் எதிரிகள் செய்த சூழ்ச்சியால் தாய் மாமனுடன் தலைமறைவாகி திருப்பனையூர் விநாயகரிடம் அடைக்கலம் புகுந்தார். 8 ஆண்டுகள் பாதுகாப்பாக இருக்க செய்தவர் துணை இருந்த விநாயார். (திருப்பனையூர்)

65. லலிதாம்பாள் பண்டாசுரனுடன் போரிடும் போது, அசுரன் புதைத்த விக்னயந்திரத்தினால் அம்பாளின் சேனை, யுத்தம் செய்யாது தூங்கினர். அங்கு வந்த காமேஸ்வரரை பார்த்து லலிதாம்பாள் புன்னகைக்கவே கணேஸ்வரர் தோன்றினார். விக்னயந்திரத்தை தகர்த்து, அம்பாளின் சேனையை விழிக்க செய்து அசுர சேனையுடன் போரிட்டு அன்னைக்கு வெற்றி கிடைக்க செய்தவர் கணேஸ்வரன்.

66. நாடோடி வியாபாரிகள் களைத்து இரவில் உணவுப் பண்டங்களை அருகில் வைத்து படுத்தனர். இருட்டில் ஓர் உருவம் உணவு உண்டது கண்டு, 'யார்' என்று வினவ, 1000 தலைகளை உயிருடன் காணிக்கையாக தந்தால் காட்சி தருவேன் என்ற ஒலி கேட்டு 999 மீன்களை வெட்டி காணிக்கையாய் கொடுத்து, ஆயிரமாவது வெட்ட அது யானைத் தலையாய் விழுந்தது கண்டு ஒட்ட நினைத்த போது அசரீரியில் 'தலையில்லாத மூக்கரைப்பிள்ளையாராக காட்சி அளிப்பேன்' என ஒலித்தது. அந்த விநாயகரே மூக்கரைப்பிள்ளையார். (காட்டுமன்னார்குடி அருகில்)

67. இராமர் சீதையைத் தேடி இலங்கைக்கு செல்லும்முன் இராமேஸ்வரம் சென்றபோது எடுத்த வேலை நன்கு முடிய உப்பூரில் கணபதியை வழிபட்டார். கடலில் நீராடி வணங்கி இலங்கை சென்று சீதையை மீட்டு வர அருளியவர் உப்பூர் கணபதி. (உப்பூர்)

68. இராமர் இலங்கைக்கு சென்று இராவணனுடன் போரிட்டு சீதையை மீட்டுவருவதற்கு, இலங்கைக்கு செல்ல இராமனுக்கு யோசனை சொன்னவர் தொண்டி கணபதி (வேதாரண்யம்)

69. இராமர் இராவணனை சம்ஹாரம் செய்தபின், சேதுவில் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து வணங்கியதால் பிரம்மஹத்தி தோஷம் நீங்கினாலும், இராமரை வீரஹத்தியாக பெண் உருவில் பேயாக தொடர்ந்தது. இராமர் வேதாரண்ய விநாயகரை வேண்டவே காலை தூக்கி வீரஹத்தி பேயை விரட்டியவர் வீரஹத்தி விநாயகன் (திருமறைக்காடு)

70. சேரமான் பெருமாளும், சுந்தரரும் கயிலை செல்வதை அறிந்த ஔவை விரைவாக பூஜையை செய்ய, விநாயகர் நிதானமாக செய்யச் சொல்லி, பூஜை முடிந்ததும் விஸ்வரூபமெடுத்து துதிக்கையால் ஔவையாரை இருவருக்கும் முன்பே கயிலைக்கு கூட்டிச் சென்றவர் பஞ்சாட்சரகணபதி. (சேலம்)

71. கடலில் திரும்ப, திரும்ப ஒரு கல் மிதந்துவர, அதை தூக்கி கடலிலேயே எறியும் போது, தனக்கு கோவில் கட்டும்படி விநாயகர் ஆணையிடவே, கடலின் அருகில் இருந்த மணல்குளத்தில் கோவில் கொண்டவர் மணற்குளவிநாயகன். (இவர் 14வது மூர்த்தம்-புவனகணபதி) (பாண்டிச்சேரி)

72. கும்பகோணம் வராகபிள்ளையார் கோவில் வாசலில் கரும்பு வியாபாரி 1000 கரும்புகளை வண்டியில் எடுத்து செல்லும் போது, பாலகனாய் வந்த விநாயகர் கரும்பு கேட்க 'கரும்பு உப்புகரிக்கும்' என கூறிதர மறுத்தான். சந்தைக்கு விற்க சென்ற கரும்பு கரிக்கவே தவறை உணர்ந்து விநாயகரிடம் மன்னிப்பு கேட்டபின் கரும்பை திதிக்க செய்தவரே கரும்பாயிரம் பிள்ளையார். (கும்பகோணம்)

73. திருவையாறு வழியாக வந்த காவிரி, ஊரின் அழகை கண்டு அங்கே தங்கியது. காவிரியை மணக்க நினைத்த சமுத்திரராஜன் விநாயகரை வழிபட காவிரியை மணம் செய்வித்து சமுத்திரராஜனின் ஆசையை நிறைவேற்றியவர் அபீஷ்டவரதகணபதி.(திருவையாறு)

74. சியமந்தகமணி அணிந்த சத்ராஜித்தின் தம்பி கிருஷ்ணருடன் வேட்டையாடச் சென்று திரும்பாததால் சியமந்தகமணிக்காக கிருஷ்ணர் கொன்றிருப்பான் என பழிச் சொல் வந்தது. சங்கடஹர சதுர்த்தி இருந்து கிருஷ்ணர், காட்டிற்கு சென்று தேடியதில் சத்ராஜித்தின் தம்பியை சிங்கம் கொன்று, சிங்கத்தை ஜாம்பவான் என்ற கரடி கொன்று சியமந்தகமணியை கொண்டு சென்றதறிந்து ஜாம்பவானுடன் போரிட்டுவென்று ஜாம்பவதியையும் மணக்க செய்தவர் சங்கடஹரகணபதி.

75. தேரெழுந்தூர் சென்ற ஞானசம்பந்தருக்கு, சிவன் கோவில் செல்லவழி தெரியாமலிருந்தபோது அங்கிருந்த சாலை விநாயகர் கைகாட்டி தெரிவித்தார். கோவில் செல்லமட்டுமின்றி பக்தர்களுக்கும் நல்வழி காட்டுபவரே **வழி காட்டிய விநாயகன்.** (தேரெழுந்தூர்)

76. சுந்தரர் சிவன்மேல் பாடவே சிவன் 12000 பொற்காசுகளை மணிமுத்தா நதியில் போட்டு, திருவாரூர் குளத்தில் எடுத்துக் கொள்ள சொன்னார். எடுக்கும்போது பொற்காசுகள் சரியாக இருக்குமா என்ற சுந்தரரின் சந்தேகம் தீர்க்க ஆற்றின் ஆழத்தில் அமர்ந்து பொற்காசுகளை எண்ணித் தந்த ஆனந்த விநாயகனே **ஆழத்துப் பிள்ளையார்.** (திருமுதுகுன்றம்)

77. சூரியன்தான் செய்த தவற்றுக்காக பரிகாரம் தேட விநாயகரை நோக்கி தவம் செய்தான். விநாயகர் அவனது பாவங்களையும், பக்தர்களின் பாவங்களையும் போக்கி அருளினார். சூரியக்கதிர்கள் தன் மீது படும்படி கோவில் கொண்டவரே **வெயிலு கந்த விநாயகன்.** (திருப்பெருந்துறை)

78. சிவனை தரிசிக்க சென்ற பரசுராமரை கயிலை வாசலில் விநாயகர் தடுக்க, கோபம்கொண்ட பரசுராமர் பரசு ஆயுதத்தை விநாயகர் மேல் ஏவினார். தந்தையின் ஆயுதம் பரசு என்பதால், அதை சக்தி இழக்க செய்யாது, தமது இடது தந்தத்தால் தாங்கவே, தந்தம் ஒன்று முறிந்து ஆனவர் **ஏகதந்தகணபதி.** ஏகதந்தம் = ஒருதந்தம்

79. துக்கோஜி என்ற மந்திரி இரவில் சாரட்டில் போகும் போது அச்சு முறிந்து நின்றது. இறங்கி பார்த்தால் பூமியில் ரத்தக்கறையாக இருக்கவே,மனம் வருந்தி தூங்கும்போது கனவில் விநாயகர் தோன்றி ‘சக்கரம் இடித்த இடத்தில் என்னுடைய ஏகாதச மூர்த்திகள் புதைந்துள்ளன. கோவில் கட்டிக் கொண்டு வரப்பிரசாதியாக பிரகாசிக்கதான் நான் இப்படி செய்தேன்’ என்றார். மறுநாளே பதினோறு மூர்த்திகளையும் தோண்டசெய்து கோவில் கட்டி ஏகாதசருத்ரராக கோவில் கொண்டலரே **சேணப்பாக்கப் பிள்ளையார்.** (சேணபாக்கம்)

80. துர்வாசர் சாபத்தால் துஷ்யந்தன் சகுந்தலையை மறக்க, துஷ்யந்தன் கொடுத்த சகுந்தலையின் மோதிரமும் தொலைந்தது. சகுந்தலை சதுர்த்தி விரதம் இருந்து வழிபடவே,பரதன் பிறந்தபின், மோதிரமும் கிடைக்க செய்து, துஷ்யந்தனுக்கும் சகுந்தலையின் நினைவு வரசெய்து மகாகணபதி ஆலயத்தில் சகுந்தலையுடன், பரதனையும் கண்டு நாட்டிற்கு அழைத்து செல்ல செய்தவர் **‘கல்யாண கணபதி’**யான டிட்லாவா மகா கணபதி.

81. தந்தைக்கு பதிலாக பூஜை செய்த நம்பியாண்டான் நம்பி நிவேதனத்தை விநாயகர் உண்ணாதது கண்டு தரையில் முட்டி அழவே, நம்பியின் பக்திக்கிரங்கிய விநாயகர் தும்பிக்கை நீட்டி உணவு உண்டார். இதை அறிந்த சோழன் விநாயகருக்கு பிடித்தமான கனிகள், பலகாரங்களை நம்பியிடம் கொடுத்தார். விநாயகருக்கு நிவேதனம் செய்து விநாயகர் உண்டபின் தேவார பதிகங்களை காட்டியருள நம்பி வேண்டவே, தில்லை கனக சபைக்கு அருகிலுள்ள அறையில் தேவாரப் பதிகங்கள் உள்ளன என சொன்னவர் **திருமறை காட்டிய விநாயகன்.** (சிதம்பரம்)

82. விநாயகரின் தலை உச்சியில் குரு, நெற்றியில் சூரியன் நாவில் சந்திரன், வலதுகை மேல் சனி, வலது கை கீழ் புதன், இடது கைமேல் இராகு, இடது கை கீழ் சுக்கிரன் வலது தொடையில், செவ்வாய் இடது தொடையில் கேது என நவகிரகங்களையும் தன்னுள்ளே கொண்டு கிரகதோஷம் நீக்குபவர் **சர்ப்ப விநாயகர்.**

83. இராமர் தலைமையில் 4000 முனிவர்கள் அஸ்வமேத யாகம் செய்தனர். யாகம் தொடங்கும்முன் விநாயகரை வழிபடாததால் மந்திரத்தை மறந்தனர். பிறகு விநாயகரை வழிபட்டு யாகம் தொடங்க, யாகத்தில் கலந்து கொண்ட விநாயகரே **நாலாயிரத்தோர் விநாயகர்.**

84. விநாயகரை தரிசிக்க, பக்தன் வந்தபோது, காவிரி பெருக்கெடுத்து ஓடியதால், தன் பக்தனுக்காக மற்றொரு கரையிலிருந்து ஓலமிட்டு காவிரியை வழிவிடச் செய்தவர் **ஓலமிட்டவிநாயகர்.** (திருவையாறு)

85. பஞ்சம் ஏற்பட்ட போது சம்பந்தர் சிவனிடம் முறையிட சிவன் சம்பந்தருக்காக படியில் வைத்த காசுகளை தும்பிக்கையால் எடுத்து தந்தவர் **படிக்காசு விநாயகர்.** (திருவீழிமிழலை)

86. விநாயகரின் மடித்து வைத்துள்ள ஒரு பாதம் பூமியையும் சரிந்த வயிறு நீரையும், மார்பு நெருப்பையும், நெற்றி காற்றையும், வளைந்த தந்தம் ஆகாயத்தையும் உணர்த்தி பஞ்சபூதங்களையும் தன்னுள் அடக்கியவரே **பஞ்சசக்தி விநாயகன்.**

87. திருமாலின் சங்கான பாஞ்சஜன்யத்தை சிவகணம் எடுத்துச் சென்றது. அதை மீட்டுத்தர திருமால் அத்திகிரி விநாயகரை வணங்கவே, சிவகணத்திடமிருந்து பாஞ்சஜன்யத்தை மீட்டு திருமாலுக்கு தந்தவர் **அத்திகிரி கணபதி.** (அத்திகிரி)

88. பட்டீஸ்வரன் கோவிலில் வைப்பதற்காக எடுத்துச் சென்ற விநாயகர் சிலையை, இளைப்பாற எண்ணிய கைவண்டிக்காரர்கள்

வண்டியிலிருந்து எடுத்து கீழே வைத்தனர். பிறகு அச்சிலையை வண்டியிலேற்ற நினைத்தும் தரையிலிருந்து அசைக்க கூட முடியவில்லை. பிறகு அந்த ஈச்சங்காட்டிலேயே கோவில் கொண்டவர் **ஈச்சனாரி விநாயகர்.** (கோவை அருகில்)

89. விஹாரபுரியில் கூன், குருடு, செவிடு என மூன்று நண்பர்கள் விவசாயம் செய்யும்போது கிணற்றில் நீர் வற்றவே, ஆழத்தோண்டியபோது கிணற்றின் ஊற்றுக்கண்ணை மூடி இருந்த பாறையை கடப்பாரையால் இடிக்கவே இரத்தம் கொட்ட தொடங்கியது. மூவரும் அதை கையால் அடைத்த போது மூவர் ஊனமும் சரியானது. ஊர்மக்கள் அதைக்கண்டு பாறையை அகற்றி, அருகிலிருந்த கணபதி சிலையை வெளியே எடுத்து இளநீரால் அபிஷேகம் செய்ய, இளநீர் காணிநிலம் முழுக்கப் பாய்ந்து குருதி நின்றது. சுயம்பு வரசித்தி விநாயகர் எனப்படும் அவரே **காணிப்பாக்கம் பிள்ளையார்.** (விஹாரபுரி)

90. தேவரும், அசுரரும் வாசுகியை நாணாக்கி, மேருவை மத்தாக்கி அமிர்தம் வேண்டி பாற்கடலை கடையும் போது மேருமலை சாய்ந்தது. விக்னத்திற்கு காரணம் விநாயகனை நினையாதது என்று உணர்ந்த தேவர்கள் கடல்நுரையால் கணபதி செய்து பூஜித்தபின் அமரர்க்கு அமிர்தம் கிடைக்க செய்தவர் **வலம்சுழி விநாயகன்.** (திருவலம்சுழி)

91. அமிர்தம் பெற்ற தேவர்கள், அமிர்தம் கிடைக்கச் செய்த விநாயகனை வணங்காததால், அமிர்தத்தை விநாயகர் மறைத்து வைத்து, அவரை வணங்கியபின் அதை தேவர்க்கு தந்தவர் **கள்ளவாரணப்பிள்ளையார்.** (திருக்கடவூர்)

92. கும்பாசுரனை அழிக்க பீமன் விநாயகரை நோக்கி தவம் செய்ய, அவனுக்கு 'அஸி' ஆயுதம் வழங்கி கும்பாசுரனை அழிக்க அருளியவர் **ஆனைகுட்டே மகாகணபதி.** (ஆனைகுட்டே)

93. விநாயகர் கோவிலில் மிளகு மூட்டையுடன் தங்கிய செட்டியாரிடம், கோவில் நிவேதன பொங்கலுக்காக பூசாரி சிறிது மிளகு கேட்க செட்டியார் அதை உளுந்து என பொய் உரைத்ததால்'சந்தைக்குப் போய் பார்த்த போது மிளகு உளுந்தாகி இருந்தது.' 'நீ பொய் சொல்லி விட்டாய் நானோ பொய்யாமொழி உடையோன் மன்னிப்புகேள்' என அசரீரி ஒலிக்கவே, செட்டியார் மன்னிப்பு கேட்டு பதிகம் பாடவே உளுந்தை மிளகாக்கினார் **பொய்யாமொழி விநாயகர்.** (தேவனூர்)

94. விநாயகர் தன் மாமாவான விஷ்ணுவின் கையிலிருந்த சக்கரத்தை வாயில் போட்டுக் கொண்டார். அதைபத்திரமாக திரும்ப

பெற நினைத்த விஷ்ணு தன் நான்கு கைகாளால், 2 காதுகளை பிடித்துக் கொண்டு தோப்புக்கரணம் போட்டதை கண்டு விநாயகர் சிரிக்கவே வாயின் சக்கரம் கீழே விழுந்ததை விஷ்ணு எடுத்துக் கொண்டார். இவரே விகட சக்கரவிநாயகர். (காஞ்சிபுரம்)

95. இராமர் தன் நினைவாக விபீஷணனுக்கு அரங்கநாதர் சிலையை தந்தார். அதை இலங்கைக்கு எடுத்துச் செல்லாமல் தடுக்க விநாயகரை அமரர் வேண்டவே, விநாயகர் சிறுவனாக விபீஷணன் முன் சென்று, அரங்கனை பெற்று காவிரிக்கரையில் வைத்து ஸ்ரீ ரங்கம் தந்தவர் மலைக்கோட்டை உச்சிப்பிள்ளையார். (திருச்சி)

96. தாயின் நோய் தீர; புலிப்பால் கொண்டுவர ஐயப்பன் வனத்திற்கு சென்ற போது ஐயப்பனை பிடிக்கச் சென்ற சனீஸ்வரனை விநாயர் தடுத்தும் கேளாமல் பிடிக்கச் சென்ற போது விநாயகரிடம் உதைபட்ட சனீஸ்வரன் தன் தந்தை சூரியனிடம் போய் விழ, தந்தை சொல் கேட்டு ஐயப்பனை பிடிக்காது தன் தம்பி ஐயப்பனை காத்தவர் விஜயகணபதி.

97. ஒரு சமயம் முனிவர்கள் வேதம் ஓதுதலை மறந்ததால் சிவனை வேண்டினார்.சிவன் அந்தணராக வந்து அவர்கள் விரும்பிய படி தமது டமருகத்தில் ஒலிகளை அடக்கி அதை ஒலித்து வீரநடனம் ஆடும் போது அவருடன் சேர்ந்து நடனமாடியவரே நர்த்தன கணபதி.

98. 'காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே' என்பதை படித்து துறவியான பட்டினத்தாரிடம், அவரின் கணக்குப்பிள்ளை சேந்தனார் செல்வத்தை என்ன செய்வது என கேட்க'வீதியில் எறிக' என்றதால், செல்வத்தை வீதியில் எறிந்த சேந்தனாரை அரசன் சிறையிலிட்டான். செய்தி அறிந்த பட்டினத்தார் சிவனிடம் பாட,சிவன் சொல்லி விநாயகர் தும்பிக்கையால் சிறை கம்பிகளை ஒடித்து சேந்தனாரை தும்பிகையால் ஏந்தி சிறை மீட்டவரே குஞ்சரமுக கணபதி.

99. ஜாதிக்காய்க்கு வரி உண்டு என்பதால், வியாபாரி வண்டியின் முன்னும், பின்னும் கடுக்காய் மூட்டைகளை வைத்து சுங்கச் சாவடியில் கடுக்காய் மூட்டை என பொய் சொல்லி வரியை ஏமாற்றினான். நீதி, நியாயம் தவறினால் தண்டனை தரும் விநாயகர் அனைத்தையும் கடுக்காய் மூட்டையாய் மாற்றவே வியாபாரி கடுக்காயை ஜாதிக்காயாய் மாற்றினால் வரியும், அபராதமும் கட்டுவதாக பிரார்த்திக்க கடுக்காயை ஜாதிக்காயாய் மாற்றியவர் கடுக்காய்ப்பிள்ளையார். (திருக்காறாவாயில்)

100. தன்னிடம் பக்தி கொண்ட ஔவையை கயிலையில் தும்பிக்கையால் தூக்கி வைத்தும், நம்பி தந்த உணவை துதிக்கையால் உண்டும், நம்பி வந்த அமரரை காக்க தும்பிக்கையால் அசுரரை கொன்றும் என தன்னை நம்பி வந்த பக்தர்களை காக்க தும்பிக்கையால் துணை புரிபவர் கணபதி. தும்பிக்கை கொண்ட கணபதியின் வடிவம் தமிழின் 'ஓங்காரம்' போல் இருப்பவரே **ஓங்கார கணபதி.**

101. எந்த ஒரு பூஜைக்கும் முன் மஞ்சளால் பிடித்து விநாயகர் பூஜை செய்தபின் தான் மற்ற பூஜையை ஆரம்பிப்பர். எந்த ஒரு பூஜையை வேலையை செய்யவோ, விக்னம் இல்லாது நடைபெற விநாயகரை வேண்டி தொடங்க தடங்கல் இல்லாமல் செய்து அருள்வார் வன்னி, ஆல், அரசு, வேம்பு, மந்தாரை போன்ற மரங்களின் கீழமர்ந்த விநாயகரை பூஜித்தாலும் ஆனந்தமாய் உடனே அருள்பவர் **க்ஷிப்ர பிரசாத கணபதி.**

102. செல்வத்திற்கு அதிபதியான லக்ஷ்மி செல்வம் தருவது போல தன்னை வழிபட்ட குபேரனுக்கு சங்கநிதி, பத்மநிதி கிடைக்கச் செய்தவரும், தன்னை வணங்கும் பக்தர்களுக்கு கேட்ட செல்வம் தருபவரும் **லெக்ஷ்மி கணபதி.** (தென்காசி)

103. தன்னிடம் பக்தி கொண்ட வியாசருக்கு புராணங்களும், ஔவைக்கு விநாயகர் அகவல், தமிழ்நீதி பாடல்களும், அபிராமி அந்தாதி பாட பட்டருக்கும், கணேசபஞ்சரத்னம் பாட ஆதி சங்கரருக்கும், கொஞ்சும் தமிழில் குஞ்சர முகத்தோன் பாட எனக்கும், மற்றும் பல பக்தர்களுக்கும் வாக்குவளம் தரும் சரஸ்வதியாய் அருள்பவர் **வித்யாகணபதி.**

104. கடுந்தவம் புரிந்து அசுரர் சிவனிடம் வரம் பெற்று, அமரரையும் அகிலத்தினரையும் துன்புறுத்த, அனைவரும் விநாயகரை வேண்டவே தன்னை நம்பி வந்த பக்தர் அனைவரையும் அவர்களின் எதிரியை அழித்து காப்பவர் **துர்கா கணபதி. (கோவை)**

105. விநாயகரின் திருவடியை வணங்கி பக்தர் பலர் கேட்ட வரங்களை கற்பக விருட்சம் போல் அருளி நற்கதி தந்து அருள்பவர் **கற்பக கணபதி.** (பிள்ளையார்பட்டி, ஜம்ஷெட்பூர்)

106. தன்னை நினையாதவர்க்கு விக்னம் தந்தும், தன்னை நினைப்பவரின் தடங்கலை போக்கி அருள்பவருமாய் விக்ன, விநாயகராக இரண்டு பிள்ளையார்கள் சேர்ந்திருப்போரே **இரட்டைபிள்ளையார்.**

107. தன்னை விரும்பி வணங்கும் பக்தர்களை, எட்டு திசையிலிருந்தும் கஷ்டங்கள் வராமல், அஷ்டதிக்கஜங்கள் போல் காத்து, எட்டு சித்திகளையும் அளிப்பவர் **அஷ்ட விநாயகன்** (அஷ்ட=8)

108. விநாயகர் தன் பக்தர்மேல் கருணை கொண்டு கருணை கணபதியாய், தக்கத் தருணத்தில் காக்கும் தருண கணபதியாய், விக்னங்களை தீர்க்கும் விக்ன கணபதியாய், வரங்களை சித்திக்க செய்யும் வரசித்தி கணபதியாய், கல்வி தரும் வித்யா கணபதியாய், செல்வம் தரும் செல்வகணபதியாய், வீரம் தரும் வீரகணபதியாய், சந்தானம் தரும் சந்தான கணபதியாய், நற்புத்தி தரும் புத்தி கணபதியாய், ஆனந்தம் தரும் ஆனந்த கணபதியாய், மங்களம் தரும் மங்கள கணபதியாய், வெற்றி தரும் விஜயகணபதியாய், ஞானம் தரும் ஞான கணபதியாய், மோட்சம் தரும் மோட்ச கணபதியாய், பக்தர்களுக்கு நினைத்ததுமே அருள் செய்யும் க்ஷிப்ர பிரசாத கணபதியாய், பக்தர்களின் குறைகளை தீர்த்து 16 செல்வங்களையும் அருளும் கற்பக கணபதியாய் என 16 விதமாய் வந்து அருள்பவர் **சோடச கணபதி** (சோடச =16)



# 43. விநாயகர் புராணம்

**உபாசனா காண்டம்**

(வரி முடிவில் சரணம் கணேசா சேர்க்கவும்)

விநாயகர் புராணத்தை
சிவபெருமான் பிரமனுக்கும்
பிரம்மதேவர் வியாசருக்கும்
வியாசர்சொன்னார் பிருகுமுனிக்கும்
விநாயகர் கோவில்கட்டி
வேந்தனானான் சோமகாந்தன்
முன்வினைப் பயனாலே
தொழுநோய் வரப்பெற்றான்
வனத்திற்கு சென்றவன்
கண்டான் பிருகுமுனியை
கணேச புராணம் சொல்லக்கேட்டு
உடல்குணம் அடைந்தான்.

<u>பிருகு முனி சோமகாந்தனுக்கு விநாயகர் புராணம் சொல்லல்</u>

(வரி முடிவில் பிள்ளையாரப்பா என்று பாடவும்)

வியாசருக்கு அருளல்

வியாசர்விநாயகரை மறந்ததால்
புராணம்பாட இயலவில்லை
பிரமன்சொல்லி பிரணவம்ஓதி
ஏராளமாய் புராணம்பாடினார்.

<u>பிரமனுக்கு அருளள்</u>

பிரம்மப்பிரளயம் வந்தபோது
பிரளயத்தில் உலகைக்காக்க
வயிற்றைப்பெரிதாக்கி வயிற்றினுள்ளே
அனைத்துயிரையும் வைத்துக்காத்தார்
பிரளயம்முடிந்ததும் வயிற்றிலிருந்த
பிரமனை துதிக்கையிலிருந்தும்
விஷ்ணு,சிவனை காதுகளிலிருந்தும்
வெளியில்எடுத்து வேலைசெய்யசொன்னார்
ஏகாட்சரம் ஓதியபிரமனுக்கு
சிருஷ்டிக்க அருள்செய்தார்
பிரமன்,வாணி மகளிராம்
சித்தி,புத்தியை மணந்துகொண்டார்.

<u>விஷ்ணுவிற்கு அருளல்</u>

விஷ்ணுசெவியில் உதித்தஅசுரர்
மதுகைடபரை விஷ்ணுவெல்ல
விஷ்ணுவிநாயகனை தியானம்செய்யவே
விஷ்ணுவிற்கு வெல்லஅருளினார்

<u>வீமராஜனுக்கு அருளல்</u>

வீமன்,சாருகாசினி தம்பதிகள்
விசுவாமித்திரரை வனத்தில்கண்டு
பிள்ளையில்லாகாரணம் வீமன்
கேட்டதால்
முன்னோர்பக்தியை முனிவர்சொன்னார்
ஏழாம்தலைமுறை சந்ததியில்
வல்லவன்கமலை தம்பதிக்கு
ஊமை,குருடு செவிடாய்
தொழுநோயுடன் பிறந்ததக்கனை
வனத்திற்கு வல்லவன்அனுப்பவே
தக்கனுடன் தாயும்சென்றாள்
எதிரேவந்த முற்கலமுனிகாற்றால்
நோய்நீங்கி அழகுபெற்றான்
வேதியன்உபதேசித்த சடாஷரத்தை
தக்கனும்,தாயும் தியானம்செய்ததால்
முற்கலமுனிபோல் விநாயகர்
காட்சிதந்து வாழஅருளினார்.

<u>தக்கனின் முற்பிறவியை பற்றி விசுவாமித்திரர் உரைத்தல்</u>

கல்யாணம்என்ற வணிகனாய்
முற்பிறவியில் தக்கன்இருந்தான்
கல்யாணம் இந்துமதிக்கு
வல்லாளன் மகனாய்பிறந்தான்
பாராங்கல்லை பிள்ளையாராய்தொழுது
தோழருடன் பொழுதுபோக்கவே
குழந்தைகளை காணாதபெற்றோர்
முறையிட்டனர் கல்யாணனிடம்
மூலவர்கல்லை எறிந்துகல்யாணம்
மகனைஅடித்து மரத்தில்கட்டினான்
ஊமை,குருடு செவிடாகவும்
தொழுநோய்வரவும் வல்லாளன்சபித்தான்
விநாயகர்வந்து வள்ளாளனுக்கருளி
வள்ளால கணபதிஆனார்.
வல்லாளன்இட்ட சாபம்தான்
இப்பிறவியிலும் தொடர்கிறதென்றார்
முற்கலமுனிவரை நேரில்கண்டு
தன்னைப்பற்றி தக்கன்சொல்லவே
ஏகாட்சரம் உபதேசித்துமுனிவர்
அரசனாக ஆசிவழங்கினார்

சந்ததிஇல்லா சந்திரசேனனின்
பட்டத்துயானை தக்கன்கழுத்தில்
மாலையிடவே விநாயகர்அருளால்
தக்கன்அரசனாகி வசுமதியைமணந்தான்
விசுவாமித்திரர்சொல்லிசதுர்த்திஇருந்து
வீமன்தம்பதிகள் ருக்மாங்கதனை
பெற்று
வளர்த்துஅவனை மன்னன்ஆக்கினர்
வனத்திற்குசென்ற ருக்மாங்கதன்
வேட்டையாடி தண்ணீர்கேட்கையில்
கவிமுனிபத்தினி முகுந்தையை
கண்டான்
மோகம்கொண்டவளை மன்னன்மறுக்கவே
முகுந்தைசாபம் மன்னனுக்குதந்தாள்

<u>ருக்மாங்கதனுக்கு அருளல்</u>

கௌதமர்போல் இந்திரன்வந்து
அகலிகையுடன் கூடிமகிழ்ந்தான்
கௌதமர்தந்த சாபம்போகஇந்திரன்
சிந்தாமணிவிநாயகர் கோவில்கட்டி
குளத்தில்நீராடி சடாஷரம்ஜபித்து
விநாயகரைவேண்டி பதவி
பெற்றார்போல்
ருக்மாங்கதனும் நாரதர்சொல்லி
விநாயகரைவேண்டி
சாபம்நீங்கப்பெற்றான்

<u>கிருச்சமதருக்கு அருளல்</u>

ருக்மாங்கதனாய் மாறிஇந்திரன்
முகுந்தையுடன் கூடல்செய்தான்
கருவைமுகுந்தை மகனாய்ஈன்றாள்
கருகாரணமறியாது கவிமுனிவளர்த்தார்
கிருச்சமதர் என்றுஅழைத்து
கணேசமந்திரம் உபதேசித்தார்
கிருமச்சமதருடன் அத்திரிமுனி,
தர்க்கவாதம் செய்தபோது,
தர்க்கத்தில் தோற்றஅத்திரி,
தகுதிஇல்லை கிருமச்சமதர்க்கென்றார்
கவிமுனிக்கு பிறந்தவனில்லை
ருக்மாங்கதராஜனின் மகன்என்றார்
தன்பிறப்பைப்பற்றி தாயிடம்வினவவே
ருக்மாங்கதனின் மகன்எனகேட்டு
'இலந்தைமரமாக' என்றுதாய்க்கு
சாபம்தந்தான் கிருச்சமதர்
'மனம்நடுங்கும் மகன்பிறக்க'என
மறுசாபம் தாயும்தந்தாள்.

உயிரைத்துறக்க நினைக்கையில்
இந்திரன்மகனென அசரீரிகேட்டு
விநாயகனைநோக்கி தவம்செய்து
கிருச்சமதர் வரங்கள்பெற்றான்
கிருச்சமதரின் யோகப்பார்வையில்
பயங்கரமாய் 'பலி'தோன்றினான்

<u>சிவனுக்கு உதவுதல்</u>

மூவுலகை வெற்றிக்கொள்ளவும்
அனைத்துலகும் அடிபணியவும்
விநாயகரின்வரம் பலிபெற்றாலும்,
'பலிக்குஅழிவு சிவனால்'என்றார்
ஆணவத்தால்பலி அனைத்துலகையும்
அடிமைப்படுத்தி சண்டையிட்டான்
அஞ்சியஅமரர் விநாயகனைபணியவே
சிவனைவணங்கச் செ சான்னார்அவர்
திரிபுரனென்ற பலியிடம்விநாயகர்
அந்தணர் கலாதரனாய்சென்று
சிவனிடமிருந்து சிந்தாமணிவிநாயகரை
திரிபுரனை வாங்கிவரச்சொன்னார்
சிவன்தர மறுத்ததால்
திரிபுரன் யுத்தம்செய்தான்.
சிவன்முகத்தில் ஐந்துமுகங்களுடன்
கணேசர்தோன்றி சிவனுக்குஉதவினார்
சிவாஸ்த்திரத்தால் திரிபுரம்வென்று,
கணேசரைவேண்டி சூலாயுதத்தால்,
திரிபுரனைசிவன் சாம்பலாக்கி,
அமரர்க்குதவி திரிபுரம்வென்றார்.

<u>பார்வதிக்கு மணம் புரிய உதவுதல்</u>

தட்சன்தவம் செய்துவேண்டி
ஈஸ்வரி மகளாய்பிறந்தாள்.
தாட்சாயணி என்றுவளர்த்து
சிவனுக்கு மணம்முடித்தான்.
யாகத்திற்கு சிவனைஅழைக்காதும்,
தாட்சாயணியை மதிக்காததாலும்,
தட்சன்யாகத்தை அழித்துசிவன்
ஆட்டுத்தலையை தட்சனுக்குப்
பொருத்தினார்

தாட்சாயணி யோகாக்னியில்
தேகத்தைவிடுத்து பர்வதராஜனின்
மகளாய்பிறந்து கணேசரைவேண்டி
மணக்கவிரும்பினாள் பரமசிவனை
சதுர்த்திவிரதமே உயர்ந்ததென்று
சிவன்முருகனிடம் சொன்னதைகேட்டு
சதுர்த்திவிரதம் அனுஷ்ட்டித்துபார்வதி
சிவனைமணந்தார் கணேசர்அருளால்.

<u>கர்த்தமனுக்கு அருளல்</u>

முற்பிறவியில் குணகனானகர்த்தமன்
வாழ்க்கைவெறுத்து இறக்க
நினைக்கையில்
சவுபரிமுனிசொல்லி சதுர்த்திஇருந்து
செல்வம்பெற்று இப்பிறவியிலும்
நாட்டைஆள்வது முன்ஜன்மபலனென
கர்த்தமனுக்கு முற்கலமுனிசொன்னார்
கௌதமமுனி சொல்லிநளன்
சதுர்த்திஇருந்து சிவஞானம்பெற்றான்

<u>இந்துமதிக்கு அருளல்</u>

அரக்கரைகொன்ற சந்திராங்கதனை
எதிர்த்துப்போரிட அரக்கிவந்தாள்
பெண்என்று போரிடாமல்
தடாகத்தில் ஒளிந்தான்அவன்
தடாகத்தில் நீராடவந்த
நாககன்னியர் அவனைக்கண்டு
கூடிக்களிக்க ஆசைப்பட்டு
கூட்டிச்சென்றனர் நாகலோகம்
நாதனைக்காணாமல் இந்துமதி
நாரதர்சொல்லி ஏகாட்சரம்ஜபித்து
சதுர்த்திவிரதம் அனுஷ்ட்டித்து
சந்திராங்கதனை திரும்பப்பெற்றாள்

### முருகருக்கு உதவுதல்

தாருகனிடம் அஞ்சியஅமரர்
காப்பாற்றவேண்டி கைலாசம்
சென்றனர்
கோளகிரியில் உபதேசிக்கும்சிவனை
வணங்கிவேண்ட சொன்னார்உமை
யோகத்தில்இருந்த சிவன்மேல்
மன்மதன் மலரம்பெய்ததால்
யோகம்கலைந்து கோபம்கொண்டு
பார்த்தேமன்மதனை எரித்தார்சிவன்
அமரர்குறை தீரவும்
தாருகன்வதம் நடத்திடவும்
முருகன்பிறக்கவும் மன்மதன்
மலரம்பெய்தான் என்றார்உமை.
ஈசனும் சரவணப்பொய்கையில்
சுப்ரமண்யரை அவதரிக்கச்செய்தார்
விநாயகசடாஷரம் முருகன்ஓதவே
தாருகனை வெல்லசக்தியும்
தன்வாகனம் மயிலும்தந்து
தேவர்களை சிறைமீட்கவும்
விநாயகர் முருகனுக்கருளி
தாருகனை வெல்லச்செய்தார்.

### மன்மதனுக்கு அருளல்

சிவன்அருளிய ஏகாட்சரத்தை
மன்மதன் தியானம்செய்யவே
கண்ணனுக்கு மகனாய்ப்பிறந்து
சுயஉருபெற அருளினார்கணபதி
கண்ணன்ருக்மிணிக்கு மன்மதன்
'ப்ரத்மயும்னன்'என மகனாய்ப்பிறந்தான்
தனித்தரதியை சம்பாசுரன்
எடுத்துவருகையில் மீன்வாயில்விழுந்தாள்
அம்மீனைப்பிடித்து, சம்பாசுரனிடம்
வலைஞன்தந்ததை அருக்கையில்
வயிற்றுள்
பார்த்தபெண்ணை தன்மகளாய்
வளர்ப்பதை
நாரதர்சொல்லி சதுர்த்திஇருந்து
ப்ரத்யும்னன் சம்பாசுரனுடன்
போரிட்டு ரதியைப்பெற்றான்
மன்மதன்மகன் அனிருத்தனை,
கனவில்கண்டஉஷை காதல்
கொண்டதால்,
தோழிசித்ரரேகை தூங்கிய
அனிருத்தனை
கட்டிலுடன்அந்தப்புரம் கொண்டு
வந்தாள்.

அனிருத்தனும் உஷையும்கூடவே
உஷைகருவுற்ற செய்திஅறிந்து
தந்தைவாணன் கோபம்கொண்டு
அனிருத்தனை சிறையிலடைத்தான்.
மகனைக்காணாத ப்ரத்யும்னன்,
தாய்சொல்லி சதுர்த்திஅனுஷ்டித்தான்
அனிருத்தன் சிறையிலிருப்பதை
நாரதர்சொல்லி கிருஷ்ணர்கேட்டு
வாணனுடன் சண்டையிட்டு
அனிருத்தன்உஷையை அழைத்து
வந்தார்

### ஆதிசேஷனுக்கு அருளல்

சிவன்தலைமேலிருந்த ஆதிசேஷன்,
சிவனைவணங்குபவர் தன்னை
வணங்குவதாய்,
சிரகனம்கொண்டதால் சிவன்எறியவே
சிரம்ஆயிரம் பிளவானது.
நாரதர்சொல்லி சதுர்த்திஇருந்ததால்
ஆயிரம்பிளவையும் ஆயிரம்
தலையாக்கி
பூமியைதாங்க சக்திதந்துகணபதி
உதரபந்தானமாய் அணிந்தார்அதை

### புருசுண்டி முனிவருக்கு அருளல்

பூலோகம்வந்த இந்திரன்விமானம்
சூரசேனன் நாட்டில்இறங்கவே
புருசுண்டிமுனியின் மகிமைபற்றி
சூரசேனனிடம் இந்திரன்சொன்னான்
விப்ரதன்என்ற கொடூரவேடன்.
முற்கலமுனியை கண்டதுமே
தீயகுணம்நீங்கி, பேரின்பம்பெற
முற்கலமுனியிடம் வேண்டினான்.
காய்ந்தகம்பை மண்ணில்நட்டு,
கணேசமந்திரம் ஏகாட்சரம்ஜபித்து
துளிர்க்கும்வரை நீருற்றசொல்லவே
ஆயிரம்வருடம் அயராதுசெய்தான்
கம்புதுளிர்த்ததும் முற்கலமுனிவந்து,
விப்ரதன்முகத்தில் நீரைதெளிக்கவே,
புருவமத்தியில் தும்பிக்கைப்பெற்று,
புருசுண்டிமுனியாய் வேடன்ஆனான்.
சங்கடஹர சதுர்த்திஇருந்து
புருசுண்டிமுனி அதன்பலனைத்
தன்முன்னோருக்கு தத்தம்செய்யவே,
விநாயகரருளால் சொர்க்கம்சென்றனர்

### கிருத வீரியனுக்கு அருளல்

கிருதவீரியன் சுகந்தைக்கு
மழலைஇல்லா காரணத்தை
கிருதவீர்யன்தந்தை பிரமனைகேட்க,
முற்பிறவிபற்றி பிரமன்சொன்னார்
முற்பிறவியில் கிருதவீரியன்
அந்தணன்சாம்பனாய் வழிப்பறிசெய்தான்
பட்டினியால்இறந்த மகன்கணேசனை
அழைத்துக்கதறி சாம்பனும்இறந்தான்
சதுர்த்திஅன்று பட்டினிகிடந்து
கணேசாஎன்றதால் சொர்க்கம்சென்றான்
கொலைபாவம்போய் சந்ததிபெருக
பிரமன்சொல்லி சதுர்த்திஇருந்து
பெற்றான்.

### அங்காரகனுக்கு அருளல்

பரத்வாஜர் தேஜஸ்ஸில்
உருவான அங்காரகனை
பூமாதேவி வளர்த்துஅவனை
பரத்வாஜரிடம் மகனாய்த்தந்தாள்.
தேவருடன்அமிர்தம் அருந்தவும்,
கிரகங்கள்போல் ஒளிவீசவும்
கணேசரிடம்வரம் அங்காரகன்பெற்றான்
மங்களன்என்ற பெயரும்தந்தார்
செவ்வாய்க்கிழமை சதுர்த்தியில்
அங்காரகனுக்கு காட்சிதந்தகணபதி
அங்காரகசதுர்த்தி அனுஷ்ட்டிப்
போர்க்கு
அனைத்துப்பலனும் அளிப்பேன்
என்றார்.

### சந்திரனுக்கு அருளல்

கயிலையில் சந்திரன்நகைக்கவே
ஒளிஇழக்க சபித்தார்கணேசர்
ஏகாட்சரம்ஓதி சந்திரன்
விநாயகர்அருளால் ஒளியைப்
பெற்றான்.

சங்கடஹர சதுர்த்திஅன்று
சந்திரனையும் பூஜிக்கச்சொல்லி
பிறைமதியை தலையில்அணிந்தார்
பாலசந்திர விநாயகர்.

### விசித்திர பூஜையும்
### விநாயகர் அருளும்

மதுசூதனனை பரிகசித்ததால்
அரசன்சுலபன் எருதாய்பிறந்தான்
அரசியின்சாபத்தால் மதுசூதனனும்,
கழுதையாகப் பிறந்தான்

மதுசூதனன் சாபத்தால்அரசியும்
சண்டாளப் பெண்ணாய்ப்பிறந்தாள்.
மழைக்குபயந்து விநாயகர்கோவிலில்
சதுர்த்திஅன்று மூவரும்தங்கினர்
கழுதைபுல்லை இழுக்கவே
கம்பால்அடித்தாள் பெண்அதை.
கழுதைமிரண்டு எருதைஉதைக்க
பக்தர்கள் விரட்டவேஅவற்றை
கோவிலைசுற்றி மூவரும்ஓடவே
எருது,கழுதை வாயிலிருந்தும்
புல்கட்டிலிருந்தும் அருகம்புல்
விநாயகர்மேல் வந்துவிழுந்தன
சங்கடஹர சதுர்த்திஅன்று
கொட்டியமழையில் மூவரும்இறக்கவே
அருகம்புல்லால் அர்ச்சித்தபலனென
விநாயகர்லோகம் மூவரும்சென்றனர்.

<u>அருகம்புல்லுக்கு மகிமை தரல்</u>

யமன்மகன் அனலாசுரனிடம்
அஞ்சியஅமரர் விநாயகரை
வேண்டவே
அமரரைகாக்க அனலனைவிநாயகர்
விழுங்கியதால் கொதித்தவயிற்றை
குளிர்விக்க எண்ணாயிரம்முனிவர்கள்
அருகம்புல்லால் அர்ச்சித்து
தணித்ததால்
அருகம்புல் அர்ச்சனைக்குத்தான்
பலன்என்று சொன்னார்விநாயகர்.

<u>ஜனகருக்கு ஞானமளித்தல்</u>

'அஹம்பிரம்மம்' என்றுநாரதரிடம்
சொன்ன ஜனகரின் கர்வத்தைஅடக்க,
அந்தணராக ஜனகரிடம்சென்று
உணவுகேட்டு அனைத்துணவை
உண்டும்
'பசிஅடங்கவில்லை' என்ற
கணேசரிடம்
'இனிதரஏதுமில்லை' என்றார்ஜனகர்
பகவானும்நீயும் ஒன்றுஎன்றால்
பசியைபோக்க படைத்துஉணவுதர
உன்னால்முடியவில்லை ஏனென்று
கேட்டு
ஜனகரின்அகந்தை அடக்ககோபத்துடன்
அரண்மைனையிலிருந்து கிளம்பி
அந்தணர்
பசியைபோக்க திரிசுரனிடம்சென்றார்.
அரண்மனைஉணவால் அடங்காத
பசியை
ஏழைதிரிசுரன் என்னதருவதென்
றெண்ணி
விநாயகரை பூஜைசெய்யும்ஒரு
அருகம்புல்லை அன்புடன்தரவே
வாயில்போட்டதும் பசிஅடங்கி
உண்மைபக்திக்கு ஊருக்கேஅருளினார்
மமதைஅடங்கிய ஜனகரைமன்னித்து
ஞானமளித்தார் ஞானவிநாயகர்.

<u>கவுண்டின்ய முனி, ஆசிரியைக்கு அருளல்</u>

கவுண்டின்யமுனி மனைவி
ஆசிரியைக்கு
அருகம்புல்லின் பெருமையை
உணர்த்த
அருகின்எடைக்கு சமமானபொன்னை
குபேரனிடம் வாங்கிவரச்சொன்னார்
தராசுத்தட்டில் அறுகைஇட்டு
மற்றொருதட்டில் அனைத்துப்பொன்னுடன்
அனைத்துஅமரர் அமர்ந்தும்தட்டு
அருகின்தட்டிற்கு ஈடாகவில்லை
விநாயகரை அர்ச்சித்தஅருகிற்கு
ஈடுஇல்லைஎன சொல்லிஅமரர்

சகலசெல்வமும் பிறவாவரமும்
கவுண்டின்ய தம்பதிக்குதந்தனர்.

### விஷ்ணுவிற்கு உதவுதல்

அசுரரின் மமதைஅடக்க
வன்னிமரத்தடி விநாயகரை
தொழுதவிஷ்ணுவிற்கு விநாயகன்
அசுரரைஒழிக்க உபாயம்சொன்னார்.
திருமாலை நரசிம்மமாகசென்று
இரண்யகசிபுவை கொல்லச்செய்தார்
விஷ்ணுவை வராகமாய்சென்று
இரண்யாட்சனை கொல்லஅருளினார்.
திருமாலை மோகினியாய்சென்று
விரோசனனை கொல்லஅருளினார்.
இந்திரப்பதவியை அடையாதிருக்கபலி
இந்திரன் திருமாலைவணங்கவே,
காசிபர்மகன் வாமனராய்பிறந்தவர்
விநாயகர்சொல்லி மூன்றடிநிலம்கேட்டு
மண்ணையும்,விண்ணையும்
இரண்டடிஅளந்து
மூன்றாம்அடியால் பலியைவென்றார்.

### கீர்த்திக்கு அருளல்

பிரியவிரதன் மனைவிகீர்த்தி
கணவர்அன்பும் மகன்பெறவும்
விநாயகரைவேண்டி அருகால்
அர்ச்சிக்கையில்
அருகில்லாதஅன்று வன்னியால்
அர்ச்சித்து
வருந்திதூங்குகையில் கணபதி
தோன்றி
அருகுபோல் வன்னியும்ஏற்று,
கணவரின் அன்பைப்பெற்று
மகனைப்பெற கீர்த்திக்கருளினார்.
கீர்த்திமகன் கிப்பிரசாதனுக்கு,
இளையதாயார் விஷஉணவைதரவே
வன்னிஇலையால் அர்ச்சித்தப்பலனால்
கிப்பிரசாதன் உயிர்பிழைத்தான்.

### வன்னியின் சிறப்பு

புருசுண்டிமுகத்தின் தும்பிக்கைப்
பார்த்து
ஏளனம்செய்த அவுரவன்,சுமேதை
புருசுண்டிமுனி சாபத்தினால்
வன்னி,மந்தாரை மரங்களானார்
இருவர்தந்தையும் விநாயகரைவேண்டி
12ஆண்டுகள் தவம்செய்ததால்
அம்மரங்களடியில் விநாயகர்அமரவே
விநாயகரைவணங்குபவர் மரங்களையும்
வணங்கினர்.

### பிரமனுக்கு உதவுதல்

பிரமன்காயத்திரியுடன் யாகம்
செய்ததால்
மற்றொருமனைவி சரஸ்வதிசபித்து
வேள்விக்குவந்த அமரரைநீராக்கவே
சிவன்சொல்லி லக்ஷ்மி,இந்திராணி
வன்னிஇலையால் விநாயகரை
அர்ச்சித்து
பதியின்சுய வடிவைப்பெற்றனர்.
மந்தாரமரத்தடியில் செல்வவிநாயகரை
பிரதிஷ்டைசெய்து பிரமன்பூஜித்தார்.

### கார்த்த வீரியனுக்கு அருளல்

கிருதவீரியன் சதுர்த்திஇருந்து
கார்த்தவீரியனை மகனாய்ப்பெற்றான்
கை,கால்கள்இல்லா கார்த்தவீரியன்
தத்தாத்ரேயர்சொல்லி ஏகாட்சரம்
ஜபித்து
விநாயகரைநோக்கி தவமிருந்து
1000கைகளும் 2கால்களும்பெற்றான்
பவழத்தால் விநாயகர்செய்து

பிரவாளவிநாயகரை பூஜித்தருள்
பெற்றான்

### புதனுக்கு அருளல்

தவசீலர் ஜானகிக்கு
புதன் மகனாகப்பிறந்தான்
மோகத்திற்கு அடிமையாகி
மூன்றுகொலைகளை புதன்செய்தான்.
தாலவனமுனிபத்தினி சுலபையின்
சாபத்தால்,
வணிகனாய்பிறந்து தொழுநோயால்
வருந்தினான்
விநாயகர்அருளால் சூரசேனன்தன்
நாட்டினருடன் சொர்க்கம்போக
விரும்பினான்
தேவவிமானத்தில் வணிகன்ஏறியதும்,
பண்ணியபாவத்தால் பறக்காததால்அது
கணேசமந்திரம் அவனுக்கு
உபதேசித்தபின்
பறந்துசென்றனர் கணேசலோகம்.

### பரசுராமனுக்கு அருளல்

காமதேனுஅருளால் ஜமதக்னிமுனி
கார்த்தவீர்யன் படைகளுக்கு
விருந்தளித்ததை கார்த்தவீர்யன்கண்டு
காமதேனுவைஅடைய ஆசைப்பட்டு
தவத்தில்இருந்த முனிவர்தலையை
கார்த்தவீர்யன் துண்டித்து
முனிபத்னிமேலும் பாணங்கள்எய்தான்
பெற்றோரிடம்வந்த மகன்இராமனிடம்
தாய்ரேணுகா விவரம்சொல்லி,
அரசகுலத்தை அழிக்கச்சொன்னதால்,
விநாயகரை வேண்டிபரசுபெற்று,
இராமன்
அன்னையின்வாக்கை நிறைவேற்றினான்.

### இராவணனுக்கு அருளல்

இராவணனுக்கு ஆத்மலிங்கத்தை
சிவன்தந்து கீழேவைக்காது
இலங்கையில்வைத்து கோவில்கட்டினால்
இலங்கைக்கும் அவனுக்கும் அழிவில்லை
என்றார்
அஞ்சியஇந்திரன் விநாயகரை
வேண்டவே,
அந்தணர்வடிவில் விநாயகர்சென்று
இராவணன்கைலிங்கத்தை அவனியில்
வைத்து
அமரர்க்குதவி இராவணனுக்கும்
அருளினார்.

### இந்திரனுக்கு அருளல்

சூரபத்மனால் இந்திரலோகம்இழந்து
பூமிவந்தஇந்திரன் நந்தவனம்அமைத்து
தோட்டத்துமலரால் சிவனைஅர்ச்சிக்கவே
சூரபத்மன் மழைவராதுசெய்தான்
இந்திரன் விநாயகரைவேண்டவே,
காக்கையாய் மாறிகணபதி
அகத்தியரின் கமண்டலத்தை
கவிழ்த்துகாவிரி பாயவைத்தார்
நந்தவனம் செழித்துமலர்ந்த
மலரால்இந்திரன் சிவனைஅர்ச்சிக்கவும்
இந்திரலோகத்தை பெறவும்செய்தார்.
அகத்தியனுக்கும் விநாயகர்அருளினார்.



**சிவன் முருகனிடம் சொன்ன**
**விநாயகரின் முக்கிய 12 அவதாரங்கள்**

### 1. வக்கிர துண்ட விநாயகர்

பற்றி உபாசனா காண்டத்திலுள்ளது
(வரிமுடிவில் பிள்ளையாரப்பா பாடவும்)

### 2. சிந்தாமணி விநாயகர்

அபிசித் குணவதிக்கு
மகனாய் கணன்பிறந்தான்.
சிவன்வரம் பெற்றுஅவன்
மூவுலகையும் ஆண்டிருந்தான்.
கபிலமுனி சிந்தாமணியால்,
கணனுக்கு விருந்துபடைத்தார்.
சிந்தாமணியை விரும்பிகணன்
கபிலரிடமிருந்து பறித்துச்சென்றான்.
விநாயகரை கபிலர்வேண்டவே
சித்தி,புத்தியுடன் காட்சிஅளித்தார்
கணன்படையுடன் போரிடவரவே
விநாயகரும் படைஉண்டாக்கி
கணனைஎதிர்த்துப் போரிட்டு

## லீலா காண்டம்

சிந்தாமணியை மீட்டுதந்தார்.
கபிலர்சொல்லி சிந்தாமணிஅணிந்து
சிந்தாமணி விநாயகர்ஆனார்.

### 3. கஜானனர்

பிரமனது கொட்டாவியில்உதித்த
சிந்தூரன் கட்டிஅணைத்தால்
எதிரிசாம்பல் ஆகும்வரத்தை
சிந்தூரனுக்கு பிரமன்தந்தார்.
தந்தைதந்த வரத்தைசோதிக்க
பிரமனையே கட்டித்தழுவ
சிந்தூரன் கையைநீட்டவே
பிரமன்பயந்து வைகுண்டம்சென்றார்
திருமாலைசோதிக்க சென்றசிந்தூரனை
சிவனைசோதிக்க கயிலைக்கனுப்பினார்.
சிவனிடம்வந்த அவனைகணேசர்
அந்தணராய்வந்து பூமிக்கனுப்பினார்.
பார்வதியின் கருவிலேஉதித்து
சிந்தூரனை கொல்வதாக
அந்தணராய் வந்தவிநாயகர்
சொன்னார் பார்வதியிடம்
மயேச்சுதமன்னன் பிரகஸ்பதியை
வணங்கவே

அனைவரும்வணங்குவர் உன்சிரசை
என்றும்,
யானையின்கருவில் மயேச்சுதன்தோன்றி
சிவபக்தனாய் முக்திபெறவும்
வாழ்த்தினார்.
நாரதர்தன்னை உபசரிக்கவில்லை என்று
யானையாய்பிறக்க மயேச்சுதனுக்கு
சாபம்தரவே மறுபிறவியில்
கஜமுகனாய் பிறந்தான்மயேச்சுதன்
கருத்தரித்த பார்வதிக்கு
ரத்னமண்டபம் சிவன்கட்டியதை
சிவபக்தன் கஜமுகன்முட்டவே
கஜமுகன்தலையை சிவன்
துண்டிக்கையில்
கஜமுகன் சிவநாமம்சொல்லவே
தன்பக்தன்தலையை துண்டித்
தோமேஎன்று
சிவன்நினைத்து கஜமுகன்தலையை
தன்அருகிலேயே வைத்துக்கொண்டார்.

<u>பூவுலகில் சிந்தூரனின் அட்டகாசம்</u>

உமையின்கருவில் உருவான
சிசுவினால் மரணமெனகேட்டு

வாயுரூபமாய், வயிற்றில்சென்று,
சிசுவின்சிரத்தை சிந்தூரன்அழித்தான்.
சிரமின்றி பிறந்தசிசுவிற்கு
தன்னிடமிருந்த கஜமுகன்தலையை
சிவன்பொருத்தவே விநாயகர்
அவதரித்தார் கஜானனராய்,
யானைமுகத்துடன் கஜானனர்
வளர்வதை
சிந்தூரனிடம் நாரதர்சொல்லவே
சிந்தூரன் கைலாசம்சென்று
கஜானனரை அழிப்பதாய்சொன்னான்.
சிறுபிள்ளைஎன்று விநாயகரை
நினைத்து
சிரகனம்கொண்ட சிந்தூரன்முன்
விஸ்வரூபம் எடுத்துகஜானனர்
தும்பிக்கையால் நசுக்கிஅழித்தார்.

## 4. விக்னராஜ விநாயகர்

சவுபரி முனியின்பத்தினி
மனோரமையின் அழகில்மயங்கி
கந்தர்வன் கையைப்பற்றியதால்
மூஷிகமாக முனிசாபம்தந்தார்.
பூவுலகில் அபிநந்தன்
வேள்விஒன்று செய்துமுடித்தால்
இந்திரப்பதவி போய்விடுமென்று
நாரதர் இந்திரனிடம்சொன்னார்
இந்திரன்சொல்லி காலநேமி
கலைத்ததால் வேள்வியை
வருந்தியமுனிவரும் வலுவில்லாதேவரும்
விநாயகரை வேண்டினர்.

### வரேண்ய அரசனிடம் மகனாய் அவதரித்தல்

விநாயக பக்தரானமன்னன்
வரேண்யன் புஷ்பகைக்குப்பிறந்த
ஆண்குழந்தையை விநாயகர்மறைத்து,
தொந்தியானை முகத்துடன்
மழு,பாசம், சூலம்,தாமரையை
நான்கு கரங்களில்ஏந்தி,
சுயமாய்குழந்தையாய் தோன்றவே
அஞ்சிஅக்குழந்தையை வனத்தில்
விட்டனர்
பராசுவமுனி எடுத்துஅதை
மனைவிவத்சலையுடன் வளர்த்தார்
பராசுவமுனி ஆசிரமத்தில்
மூஷிகன்தொல்லை அதிகரிக்கவே
விநாயகர்ஏவிய பாசத்தால்
கட்டுண்டமுஷிகன் சரணடைந்தான்
கந்தர்வனின் சாபம்தீர்த்து
மூஷிகத்தை வாகனம்ஆக்கினார்
யாகத்தைதடுத்த காலநேமி
விநாயகர்அங்குசத்தால் கட்டுண்டு
வெள்ளமாகி அழித்ததால்
உள்ளங்கையில் நீரைஅடக்கினார்
பலவிதமாய் யுத்தம்செய்த
விக்னன்மேல் வேலைஏவவே
விநாயகரை சரண்அடைந்த
விக்னனைஅடக்கினார் விக்னவிநாயகர்
வரேண்யனும் மனைவியுடன்வந்து
மகனாய்உதித்தவர் விநாயகரெனஅறிந்து
பராசுவமுனியின் ஆசிரமம்சென்று
விநாயகரைவணங்கி அருள்பெற்றனர்.

## 5. மயூரேச விநாயகர்

திருமாலின் தொப்புள்கொடியில்
அவதரித்த பிரமன்படைத்த
தேவரும்,அசுரரும் போரிடவே
தேவரிடம் அசுரர்தோற்றனர்.
வேதங்களை அஸ்த்திரமாக்கி,
தேவர்அசுரரை விரட்டியதால்
கமலாசுரன் சங்காசுரனிடம்
அசுரர்தங்களை காக்கவேண்டினர்.

கமலாசுரன் வேதத்தைதிருடி
கடலின்அடியில் ஒளித்துவைத்ததை
பிரமன்அறிந்து சிவனை வேண்டியதால்
'விநாயகர்மீட்பார்' என்றார்சிவன்.
ஏகாட்சரம் ஜபித்துபிரமன்

விநாயகரை தியானம்செய்யவே
வேதத்தைமீட்டு அசுரரைஅழிப்பதாய்,
காட்சிஅளித்த விநாயகர்சொன்னார்.
'மல்லாலர்'என்ற அந்தணராக
விநாயகர் சிஷ்யர்களுடன்
சுந்தர ஆசிரமம்வந்து
வேதத்தை உபதேசித்தார்.
செய்திஅறிந்து கமலாசுரன்,
படைகளுடன் ஆசிரமம்வரவே,
விநாயகரும் படைஉண்டாக்கி,
இரண்டுபடையும் யுத்தம்செய்தன.
கார்க்கிய முனிவர்சொல்லி,
விநாயகர் யாகம்செய்து,
மயிலைபெற்று வாகனமாக்கி
மயூரேச கணபதிஆனார்.
புத்திதேவி போர்செய்யவிரும்பி
கோபத்தினால் லாபனைப்படைத்தாள்
தந்தைமயூரேசர் ஆசியுடன்இலாபன்
யுத்தம்செய்தான் அசுரருடன்
அசுரனின் மோகனாஸ்த்திரத்தால்
இலாபன்படையினர் மூர்ச்சையானார்
இலாபன்மூர்ச்சையை தெளிவித்த
பின்னும்

விநாயகர் கண்விழிக்காததால்
தீயைவலம் வந்துஇலாபன்
தீக்குளிக்க செல்லும்போது
விநாயகர்எழுந்து மகனைத்தடுத்து
அன்பைசோதிக்க நடித்தேன்என்றார்.
கமலாசுரன்சிந்தும் இரத்தத்துளியில்,
அசுரவீரர் தோன்றியதால்
சித்தி,புத்தியை இலாபன்நினைக்கவே
பூதங்களை தோற்றுவித்தவர்கள்
பூமியில்சிந்தாமல் இரத்தத்தை
பூதங்களை பருகசெய்தனர்.
வேதத்தைமீட்டு கமலாசுரனைஅழித்து
அமரர்க்குஉதவினார் மயூரேசவிநாயகர்.

## 6. பாலவிநாயகர்

சக்கரபாணி அரசனுக்கு
சந்ததி பிறந்திறந்ததால்
சங்கடம்தீர சவுனகமுனிசொல்லி
சூரியவிரதம் அனுஷ்டித்தான்.
சக்கரபாணி உக்கிரைக்கு
மூன்றுகண்கள் செஞ்சடையுடன்
இருகரங்களில் சூலம்ஏந்தி
ஆண்மகன் பிறந்தான்.
அந்தணன்வடிவில் வருணன்வந்து,
'சிந்து'என பெயரிட்டான்.
அசுரகுருவின் சொற்படிசிந்து
சிவனைநோக்கி தவம்செய்தான்
அண்டமனைத்தும் அடிபணியவும்
சாகாவரமும் சிந்துபெற்று
இந்திரனுடன் யுத்தம்செய்து
இந்திரலோகம் கைப்பற்றினான்.
விஷ்ணுவுடன் போரிடும்போது
கருடனின்ஒரு சிறகைஅறுத்தான்.
தந்திரமாய் சிந்துவைஏமாற்ற
வரம்தருவதாய் சொன்னார்விஷ்ணு
'தேவருடன் விஷ்ணுவந்து
இடும்பணியை செய்யச்சொல்லிஎன
வரன்கேட்டு அசுரன்தந்திரமாய்
அமரரை சிறையிலடைத்தான்.
தேவகுரு பிரகஸ்பதிசொல்லி
தேவர்கள் சதுர்த்திஇருந்து
சித்தி,புத்தியுடன் விநாயகர்தோன்றி
'சிறைமீட்பேன் தேவரை'என்றார்.

கௌதமருடன் மற்றமுனிவரும்
திரிசந்தி க்ஷேத்திரத்தில்
யோகத்தால் உருவத்தைமறைத்து
சிவனைநோக்கி தவம்செய்தனர்.
சிந்துராஜனை சம்ஹரித்து
தேவரை சிறைமீட்கசொல்லி
சிவனிடம்முனிவர் வேண்டவே
முனிருடன்தங்கி சிவன்அருளினார்.
பார்வதி மயூரேசர்ஆலயத்தில்,
சிவன்சொல்லி ஏகாட்சரம்ஜபிக்கவே,
மும்முககணபதியாய் ரிஷபவாகனத்தில்
விநாயகர் காட்சிஅளித்து
சிந்துவைஅழித்து தேவரைசிறைமீட்க
'பார்வதிமகனாய் உதிப்போம்'என்றார்
விநாயக சதுர்த்திஅன்று
விஸ்வரூபமாய் காட்சிதந்த
விநாயகரை பார்வதிவேண்டவே,
பாலவிநாயகராய் பார்வதியிடம்
உதித்தார்.

ஆறுகரங்கள் மூன்றுகண்களுடன்
திரிசந்தி க்ஷேத்திரத்தில்பிறந்த
கணேசர்என்ற குழந்தையைமுனிவர்
வணங்குவதாய் தூதுவன்சொல்லவே
'சிந்துஅழிவு கணேசரால்'என்று
சிவன்சொன்னதை நினைத்துசிந்து
'அக்குழந்தையால்அழிவென' அசரீரியும்
கேட்டு
அசுரரைஅனுப்பி கொல்லச்
சொன்னான்அதை

## குழந்தையில் அசுரருடன் போரிடல்

கிருத்திகாசுரனை கழுத்தைநெறித்தும்,
கேமாசுரனை பூனையாய்குதறியும்
குரூராசுரனை வேதத்தைநாயாக்கியும்
பாலாசுரனை விளையாடியும்கொன்றார்
மாமரமான வியோமாசுரனை
மரத்துள்நுழைந்து பிளந்துஅழித்தார்.
கடகாசுரன்முதுகை காலால்அழுத்தியும்,
ஆசாசுரனை விரைவாய்ஓட்டியும்,
கற்பகாசுரனை விஸ்வரூபமெடுத்தும்
கமலாசுரனை மோதியும்கொன்றார்.
தடாகநீரில் விஷம்கலந்த
கூடாசுரனை நெற்றிக்கண்ணால்
எரித்தும்
விகிர்தாசுரனை கரையில்எரிந்தும்,
கரும்பாசுரனை ஹீங்காரம்செய்தும்,
சஞ்சலாசுரனை பந்துபோல்உதைத்தும்,
விருகாசுரனை அங்குசத்தாலும்கொன்றார்.
கர்த்தமாசுரன் கணேசரைவிழுங்கவே
உமையின்முகத்தில் உதித்துக்கொன்றார்.
நிழலைப்பிடிக்க வந்தசாயாசுரனை
பார்வையாலேயே எரித்துக்கொன்றார்.
பரசு,தாமரை பாசம்,அங்குசத்தை
விஸ்வகர்மா விநாயகருக்குத்தந்தார்.

## தாயிடம் விளையாடல்

பால்பருகவந்த குழந்தைகணேசரை
பார்வதி கடிந்துகொள்ளவே
ஐந்துமுகங்கள் பத்துகரங்களுடன்
சதாசிவனாய் காட்சிதந்தார்.

## வினதைக்கு அருளல்

வினதையின் மகன்ஜடாயு
கத்துருவை இழுத்துத்தள்ளவே
கத்துருதன் புத்திரரிடம்சொல்லி
ஜடாயுவை சிறைவைக்கச்சொன்னாள்
தாய்சொல்கேட்டு அஷ்டநாகர்களும்
பட்சிராஜரை சிறைவைத்தனர்
நாகரிடமிருந்து தன்புத்திரரைமீட்க
சக்திவாய்ந்த புத்திரனைப்பெற
காசியபமுனியிடம் வினதைவேண்டவே
காசியபமுனியும் அருள்செய்தார்.

பட்சியாகவந்த கிருஷ்ணாசுரனை
பாசம்ஏவிக் கொன்றார்விநாயகர்
வினைவயிற்றில் உண்டானமுட்டையை
விரல்நகத்தால் விநாயகர்கீறவே
வெளிவந்த மயிலில்ஏறி
மயூரேசர் என்றானார்.
சிறைப்படுத்திய பட்சிகளைமீட்க
வினதைகேட்ட வரத்தைதந்தார்
நீராடவந்த கணேசரைகண்டு
நாககன்னி வாசுகிமகள்
பூஜைசெய்வதாய் வஞ்சகமாய்சொல்லி
நாகலோகம் கூட்டிச்சென்றாள்
உபசரிக்காத வாசுகியின்தலையின்
ரத்தினத்தை கணேசர்பறிக்கவே
வாசுகி மூர்ச்சித்துவிழவே
பட்சிராஜரை சிறைமீட்டார்கணபதி
கணேசரைஎதிர்த்து நாகர்கள்போரிடவே
மனதில்கணேசர் மயிலைநினைத்தார்.
மயிலைக்கண்டு நாகர்கள்ஓடவே,
மயில்பிடித்து இழுத்துவந்த
ஆதிசேஷனை அரைஞாணாய்அணிந்து
வாசுகியை மோதிரமாய்அணிந்தார்
காட்டுப்பன்றி எருமையாய்வந்தவனை
கணப்பொழுதில் வதைத்துக்கொன்றார்

சாகாவரம்பெற்ற கனலாசுரனை
சிந்துராஜன் போரிடஅனுப்பினான்
சிவனிடமிருந்து சூலம்பெற்று,
மயில்மீதேறி கணேசர்எதிர்த்தார்.
அசுரன்எய்த நாகாஸ்த்திரத்தை
கருடாஸ்திரத்தால் கணேசர்அழித்தார்.
அசுரன்சிந்திய இரத்தத்துளிகள்
அசுரராய் தோன்றிஎதிர்க்கவே
நெற்றிக்கண்ணை கணேசர்திறந்து
தோன்றியஅசுரரை எரித்துக்கொன்றார்
தண்டம்ஓங்கி கனலாசுரன்வரவே
சூலத்தால் அசுரனைக்கொன்றார்.
சிந்துராஜன் ஐம்பூதங்களையும்
திரிசந்திக்ஷேத்ரம் செல்லதடுத்ததால்
முனிவர்கள் கணேசரைவணங்கினர்
வீரபத்திரர் நந்தி,முருகனுடன்
விநாயகர் கண்டநகர்சென்று
சிந்துவிடம்தூது நந்தியைஅனுப்பினார்
அகந்தைகொண்ட சிந்துராஜன்
ஆயத்தமானான் யுத்தம்செய்ய
மித்திரனைமுருகனும், கவுத்துவனை
வீரபத்திரனும்
வீரராசனை நந்தியும்கொன்றார்
தன்மன்,அதன்மனும் போரில்மடிந்தனர்.

அசுரன்அஸ்திரத்தை விநாயகர்சூலம்
விழுங்கவே காதுஅறுந்தசிந்து
போர்களம்விட்டு பதுங்கினான்
அரண்மனையில்
சிந்துமைத்துனன் கலன்,விகலனை
வீரபத்திரரும் முருகரும்கொன்றனர்.
அமரரைவிடுத்தால் அவமானமென
சிந்து
கணேசருடன் போரிடச்சென்றான்
அசுரன் எய்தசக்கராயுதம்
வலம்வந்து கணேசரைவணங்கியது
அசுரன்எய்த சூலாயுதத்தை
கணேசரின் பரசுஅழித்தது.
சூலாயுதத்தால் சிந்துவைசம்ஹரித்து
தேவரைசிறைமீட்டு தேவர்க்குதவி
சிந்துவின்தந்தை சக்கரபாணிக்கருளி
சித்தி,புத்தியுடன் காட்சிதந்தார்விநாயகர்

## 7. தூமகேது

சிவபக்தன் தூமாசுரன்
தான்அசுரர்குலத்தில் பிறந்ததுஏனென
அரண்மனைவந்த பிருகுவிடம்கேட்க
முன்ஜன்மம்பற்றி சொன்னார்முனி
முன்ஜன்மத்தில் தூமாசுரன்

விகுதிஎன்ற அரசனாய்பிறந்து
சிவனிடம் பக்தியாய்இருந்து
சகலசெல்வமும் பெற்றிருந்தான்.
இந்திரப்பதவி விரும்பி,விகுதி
செய்யப்போகும் நூறாவதுயாகத்தை
தடுக்க,இந்திரன் நாரதரிடம்
சொல்லவே,
அந்தணராய்நாரதர் யாகசாலைவந்தார்.
'சிவசன்மன்'என்று தன்பெயர்சொல்லி
பிரம்மச்சாரியாய் இருப்பதாகவும்
இல்லறம்நடத்த ஆசைப்பட்டு
விகுதிமனைவியை அளிக்கயாசித்தார்
அரசனுக்குநாடும் ஒருமனைவிஎன்று
விகுதிதன் நாட்டைத்தருவதுடன்
நாட்டிலுள்ள கன்னிப்பெண்களில்
பிடித்தபெண்ணையும் தருவதாய்
சொன்னான்

யாகத்தைதடுக்க வந்தநாரதர்
மன்னன்சொல்லை கேட்காது
அசுரனாய்பிறக்க சாபம்இட்டு,
நூறாவதுயாகத்தை அழித்துச்சென்றார்.
'சிவனிடம்பக்தி கொண்டதாலும்
அஸ்வமேத யாகங்கள்செய்ததாலும்,
முன்ஜன்மத்தின் புண்ணியப்பலனை
இப்பிறவியிலும் பெற்றாய்'என்றார்முனி

### தூமாசுரனை அழித்தல்

மாதவன்,சுமுதை தம்பதிக்கு
மழலைச்செல்வம் இல்லாததால்,
மனம்வெறுத்து வனத்திற்குசென்று,
விஷ்ணுவைவேண்டி தவம்செய்தாள்
சுமுதை
விஷ்ணுமகனாய் பிறக்கசுமுதைக்கு
விஷ்ணுவாய்வந்து விநாயகர்
அருளினார்

சுமுதையின் கருவினில்விஷ்ணு
விநாயகர்அருளால் உருவானார்.
'சுமுதைவயிற்றில் உருவாகும்மழலை
உன்னைஅழிக்கும்'என அசரீரிகேட்டு
தூமாசுரன்கலங்கி வித்ருமனைஅழைத்து
சுமுதையின்கருவை அழிக்கச்
சொன்னான்

கண்அயர்ந்த மாதவன்,சுமுதையை
காட்டில்விட்டான் கட்டிலுடன்வித்ருமன்
கண்விழித்த சுமுதைவித்ருமனிடம்
காரணம்கேட்டு பயந்துநடுங்கி
கருணாமூர்த்தியை தியானம்செய்யவே
எண்ணற்றவீரர் தோன்றிஎதிர்த்து
வித்ருமனை ஓடச்செய்தனர்.
காட்டிலிருந்த மாதவன்,சுமுதையை
காக்கவேவிநாயகர் குழந்தையாய்
ஆயுதம்தாங்கிய நான்குகைகளுடனும்
மூன்றுகண்களுடனும் சுயமாய்
தோன்றினார்

பிறக்கப்போகும் குழந்தையைக்காக்க
தானாகவே சுமுதையின்மடியில்
குழந்தையாய்வந்த கணேசரைக்கண்டு
மன்னனிடம் மந்திரிசொல்லவே
கணேசரைஎதிர்த்து போரிடச்சென்ற
தூமாசுரன்சேனையை பாலச்சந்திரர்
கக்கியதால் விஷப்புகையை
பார்வைமங்கிய அசுரசேனை
பாதாளத்தில் வீழ்ந்துமடிந்தனர்
சுமுதையிடம் அவதரித்துவிஷ்ணு
செவ்வனேஆண்டு வைகுந்தம்
சென்றார்

தூமத்தால்அழித்த பாலசந்திரனை
தூமகேது என்றழைத்தனர்

## 8. கணேசர்

திரிபுரன்வதம் [பக்கம் 79]

## 9. கணபதி

அசுரர்குலத்தை அழியாமல்காக்க
அசுரேந்திரன்தன் குருவிடம்கேட்கவே
மாகதமுனியுடன் அசுரகன்னிகூடினால்
பிறக்கும்குழந்தை குலத்தை
காக்குமென்றார்.
நிஷ்டைகலைந்த மாகதமுனி
அசுரஅழகி விபுதையிடம்மயங்கி
இருவரும்யானையாகி கூடிக்களிக்கவே
கஜமுகாசுரன் தோன்றினான்
அசுரகுருசொல்லி தவம்செய்து
அழியாவரம் சிவனிடம்பெற்றான்.

### கயிலையில் கணபதி அவதரித்தல்

சித்திரயானையின் உட்ப்பொருளை
கயிலையில்உமை சிவனிடம்கேட்டதும்
களிறும்,பிடியுமாய் மனதில்கலந்த
சிவன்,உமையிடம் யானைமுகனாய்
உதித்தகணபதியிடம் சிவன்
கஜமுகனை சம்ஹரிக்கச்சொன்னார்

### கஜமுகாசுரன் வதம்

உமையும்,சிவனும் சொக்கட்டான்
ஆடுகையில்
சிவன்வென்றதாய் பொய்சாட்சிசொன்ன
நடுவர்விஷ்ணு உமையின்சாபத்தால்
குருட்டுபாம்பாய் காட்டில்திரிந்தார்
அசலன்முதுகில் ஏறிகணபதி
ஏராளமான பூதகணங்களுடன்
கஜமுகனுடன் சண்டையிட
மதங்கநகரம் சென்றார்.
சிறுவனென்று நினைத்துகணபதியை
சிறையிலிருந்த அமரரைவிடாமல்
சிரகனம்கொண்ட கஜமுகாசுரனை
தந்தத்தால் கொன்றார்கணபதி
வனம்சென்ற மகாவிஷ்ணு
சிவ்னைதியானித்து பாம்பாய்இருந்தவர்
கஜமுகனைவென்று வந்தகணபதியின்
பார்வைபட்டு சுயஉருபெற்றார்.

## 10. மகோற்கடர்

ரௌத்திரகேது சாரதையின்மகன்கள்
தேவாந்தகன் நராந்தகனுக்கு
நாரதர்பஞ்சாட்சரம் உபதேசிக்கவே
மூவுலகும் அடிபணியவும்
அமரரால் அழிவில்லாவரமும்
தவம்செய்து சிவனிடம்பெற்றனர்
நராந்தகனும் தேவாந்தகனும்
மூவுலகையும் கைப்பற்றவே
தேவரின் துன்பம்போக்க
'அதிதி' காசிபரிடம்சொன்னாள்
விநாயகரைநோக்கி அதிதிதவம்
செய்யவே
அதிதிகாசிபரிடம் மகோற்கடர் உதித்தார்
அசுரர்ருக்கழிவு அதிதிமகனாலென,
சோதிடர் சொல்லக்கேட்டு
அவதரித்த மகோற்கடரைகொல்ல
அசுரரை அனுப்பினான்நராந்தகன்

### அசுரரின் வதம்

மகோற்கடரை விழுங்கியஅரக்கியை
கால்விரலால் வயிற்றைகிழித்தார்
கிளியாய்வந்த துந்துபி,உதத்தனை
பருந்தாய்மாறி மகோற்கடர்கொன்றார்
சாபத்தால்முதலையாகி, கணேசரை
கவ்விச்சென்ற கிரௌஞ்சனின்
உயிரைப்போக்கி சாபம்தீர்த்தார்.
காசியபர்மகன் மகோற்கடருக்கு
உபநயனம் செய்வித்தபோது
அசுரர்எறிந்த அஸ்திரம்பிரயோகித்த
அட்சதைமலராய் மாறிவணங்கின
மகோற்கடர்அக்ஷதை, மாய்த்தது
அசுரரை

<u>இந்திரனின் மமதை அடக்கல்</u>

பஞ்சலிங்கத்தை வாயினுள்வைத்து
சகலஉலகமும் வாய்க்குள்காட்டினார்.
தேவர்கள் அஸ்திரங்கள்தந்து,
மகோற்கடரை வணங்கவே,
மமதையுடன் இந்திரன்மட்டும்
காசிபர்சொல்லியும் வணங்காமலிருந்தான்
மகோற்கடரின் விஸ்வரூபம்கண்டு
மமதைஅடங்கி மன்னிக்க
வேண்டினான்.

காசிராஜன் மகனின்மணத்தை
நடத்தித்தர மகோற்கடர்சென்றார்.
தூமாட்சனை சூர்யாஸ்த்திரத்தாலும்
அவன்மகனை பெருமூச்சாலும்கொன்றார்
பாறையாய்நின்ற அசுரனை
தேங்காய்உடைத்து பரசுவால்கொன்றார்
தருமதத்தன் தன்மகள்களை
மகோற்கடருக்குமணம் செய்துதர
விரும்பினார்.

மகோற்கடரை அழிக்கவந்த
காமன்,குரோதனை புல்லால்கொன்றார்
யானையானகுண்டனை ஓடவிரட்டியும்
விஷம்தேய்த்தசிரம்பையை விஷத்தால்
கொன்றார்

சித்தி,புத்தியை மகோற்கடர்மணந்து
காசிராஜனுடன் காசிசென்றார்.

<u>காசிக்கு செல்லும் போது</u>
<u>அசுரர் வதம்</u>

விதாரணனை புயலாய்வீசவும்
ஜ்வாலாமுகனை அக்னியாய்எரிக்கவும்,
வ்யாக்ராமுகனை விழுங்கச்சொல்லியும்
நராந்தகன்பணித்ததால் காசிராஜன்அஞ்சி
மகோற்கடரிடம் சரணடைந்தான்.
வாயு,அக்னியானவனை நீராக்கியும்
வ்யாக்ராமுகனை விஸ்வரூபத்தாலழித்தார்
மேகனைமாலையிட்டு சாம்பலாக்கினார்
சிறுவனெனநினைத்த புருசுண்டிநம்ப
சித்தி,புத்தியுடன் காட்சிதந்தார்

<u>அன்பு பக்திக்கு அருளல்</u>

விநாயகரை விருந்துண்ண
காசிநகரத்தார் அழைத்தபோது
தவிட்டுப்பண்டம் தரவிரும்பாத
ஏழைசுக்கிலன் வீட்டிலிருந்தான்.
அனைவர்வீட்டிலும் சென்றதுபோல
சுக்கிலர்வீடும் சென்றார்மகோற்கடர்
தவிட்டால்செய்த பண்டமென்றாலும்

அன்புடன்தருபவை அமிர்தமென
சொல்லி,
வருந்தியசுக்கிலர் வித்ருமைக்கு
சித்திபுத்தியுடன் அருளினார்
மகோற்கடர்
நராந்தகனுடன் போராடிகுரூரன்
காசிராஜனை சிறைமீட்டான்.

<u>நராந்தகன் தேவாந்தகன் வதம்</u>

பினாகத்தால் நராந்தகனை
மகோற்கடர் வதம்செய்தார்.
துண்டிக்கப்பட்ட நராந்தகன்தலை
தேவாந்தகன் முன்விழவே
மகோற்கடருடன் போரிடச்சென்றான்.
புத்திதேவி அஷ்டமாசித்திகளையும்
ஆயுதம்தாங்கிய வீரரையும்படைத்து
அசுரப்படையுடன் போரிட்டனர்.
அஷ்டசித்திகளை தேவாந்தகன்
தாக்கவே
பயங்கரமான சக்தியைப்படைத்தாள்.
புத்திதேவி தேவாந்தகனை விழுங்கவே
சூக்ஷமரூபமாய் வெளியேவந்து
தந்தைசொல்லி ஹோமம்செய்து
கருப்புகுதிரையுடன் போர்வீரரையும்
பெற்று

தேவருடன்போரிட மறுநாள்வந்தான்.
மோகனாஸ்த்திரம் அசுரன்எய்தவே
தேவகணங்கள் மயங்கிநின்றன.
யுத்தகளத்தில் ஹோமம்செய்து
தேவாந்தகன் நரபலிகொடுத்தான்
யாகத்தில் பெண்பூதம்வந்து
தேவகணங்களை பூதம்விழுங்கின.
மகோற்கடரின் ஞானாஸ்த்திரத்தால்
தேவகணங்கள் போரிடத்தொடங்கின
பெண்பூதத்தை இரண்டாய்கிழித்து
தேவாந்தகனுடன் மகோற்கடர்
போரிடவே
அசுரனின்அஸ்த்திரங்கள்
பயனில்லாததால்
பாசுபதாஸ்த்திரத்தை அசுரன்விடுத்தான்.
மகோற்கடர்அஸ்திரம் விழுங்கவேஅதை
தண்டத்தால்அடிக்க வந்தஅசுரனை
தந்தத்தால் சிரத்தில்குத்தி
தேவாந்தகன்தலையை வெடிக்கச்
செய்து
மகோற்கடர் சம்ஹரித்தார்
அசுரவதம் முடித்த மகோற்கடர்
காசிராஜன் மகனின்மணத்தை
புரோகிதராக நடத்திக்கொடுத்து
காசியபர் ஆசிரமம்சென்றார்.

## 11. உடுண்டி விநாயகர்

எவர்தலையில் கைவைத்தாலும்
அவர்பஸ்மமாக வேண்டுமென
பிரமாசுரன் சிவன்வரம்பெற்று
சிவனிடமே சோதிக்கசென்றான்.
மோகினியாய்வந்த விஷ்ணுவின்
அழகில்மயங்கி அடையவிரும்பினான்.
ஆடலில்தனக்கு இணையானவரையே
மணப்பதாய் சொன்னாள்மோகினி.
மோகினிபோலவே ஆடிபிரமாசுரன்
தலையில்தானே கைவைத்தழிந்தான்
சிவன்வரம்பெற்ற பிரமாசுரன்மகன்
துராசதன் மூவுலகைவென்றான்
காசிக்குசென்று யாகத்தைதடுத்ததால்
அவிர்பாகமில்லாது தேவர்வாடினர்.
தேவர்கள் உமையைவேண்டவே
ஐந்துமுகங்கள் பத்துகரங்களுடன்
தேவியின் திருமுகத்திலிருந்து
தோன்றினார் வக்ரதுண்டவிநாயகர்
தேவியிடமிருந்து சிங்கத்தைப்பெற்று
சேனையுடன் போரிடச்சென்றார்.
விசுவரூபத்தால் சிரத்தைகாலால்
அழுத்தி
காசியைகாக்க துராசதனைசொன்னார்
ஸ்வயம்பாமனுக்குப்பின் ஆட்சிசெய்ய
ரிபுஞ்சயனிடம் பிரமன்கேட்டார்.
காசியிலிருந்துதேவர் வெளியேறினால்
நாட்டைஆள்வதாய் ரிபுஞ்சயன்
சொன்னான்.
மந்தரகிரிக்கு மரீசிமுனிஅழைக்கவே
அமரருடன் சிவன்சென்றார்அங்கு.
காசியை விட்டுஅமரர்சென்றதால்
ரிபுஞ்சயன் காசியைஆண்டான்
காசிவர விரும்பியஅமரர்
சிவனைவேண்டவே விநாயகரிடம்
சொன்னார்.
சோதிடசிறுவனாய் காசிசென்ற
விநாயகர்
மக்கள்மனதில் குழப்பம்
உண்டாக்கவே
நாட்டைப்பற்றி அச்சம்கொண்டஅரசன்
எதிர்காலம்பற்றி சோதிடனிடம்
கேட்டான்
'பதினேழாம்நாள் வரும்அந்தணர்
பதில்சொல்வான்' என்றார்சோதிடர்.

விஷ்ணு,லக்ஷ்மியை காசிக்குஅனுப்பவே
மாறுவேடத்தில் அனாச்சாரம்பரப்பினர்.
பதினேழாம்நாள் அரண்மனைவந்த
அந்தணனை விஷ்ணுஎன்றும்
சோதிடனாய்வந்தவர் விநாயகரென்றும்
யோகபலத்தால் அறிந்தரிபுஞ்சயன்
அமரரை பகைத்ததற்கு
மன்னிக்கவேண்டினான் விஷ்ணுவிடம்
'விசுவநாதரிடம் காசியைதந்தால்
செய்தபிழை போகுமென்றார்'விஷ்ணு
சிவனிடம்காசியை ரிபுஞ்சயன்தரவே,
சிவனுடன் தேவர்அனைவரும்
உடுண்டிவிநாயகர் உதவியால்
உற்சாகத்துடன் காசிவந்தனர்.

## 12. வல்லபை விநாயகர்

'சக்திதனக்கு மகளாய்பிறந்து
அவளைவிநாயகருக்கு மணம்செய்துதர'
விநாயகரைநோக்கி தவம்செய்து
வேண்டியவரத்தைப் பெற்றார்மரீசி.
'உலகஇயக்கம் எதனால்'என்றுஉமை
சிவனிடம்கேட்க 'சக்தியால்'என்றசிவன்
உமைக்குகர்வமோஎன சிவனேஎன்றில்லாது
உலகசக்திகளை அடக்கினார்சிவன்.
உலகமே இயங்காததைக்கண்டு
உமைசிவனிடம் மன்னிக்க
வேண்டினார்.
'மரீசியின்மகளாய் அவதரித்து
வளர்ந்ததும்
விநாயகர்உருவில் மணப்பதாய்'சிவன்
சொன்னார்
யமுனைதாமரையில் சங்குஉருகொண்ட
பெண்குழந்தையை மரீசிஎடுத்து
'வல்லபை'என பெயரிட்டுவளர்த்தார்.
சிவனைநோக்கி தவம்செய்தாள்
வல்லபை
விநாயகர் சிவனிடம்சொல்லி
வல்லபையிடம் அந்தணராய்சென்று
மணப்பதாய் சொல்லசொல்லவே
'சிவனைத்தான் மணப்பேன்'என்றாள்
அந்தணராய்வந்த சிவன்மறைந்து,
விநாயகர்உருவில் சிவன்வரவே
விநாயகரை வணங்கினாள்வல்லபை
விநாயகராக வந்தசிவன்
மரீசிமகளான சக்தியைமணந்து
வல்லப கணபதிஆனார்.

விஷ்ணுபுத்திரிகள் பன்னிருவரையும்ஏற்று
விசுவரூபம்காட்டி ஞானமளித்தார்
(சரணம் கணேசா என்று பாடவும்)

கணேசபுராணம் கேட்டபலனை
சோமகாந்தன் தன்நாட்டினருக்கு
தத்தம்செய்து அனைவரையும்
விநாயகர்லோகம் கூட்டிச்சென்றார்

விநாயகபுராணம் பாடிநாமும்
விநாயகர்அருள் பெற்றுவாழ
கற்பகவிநாயகர் கழல்பணிந்து
கவலையின்றி மகிழ்ந்துவாழ்வோம்.

பக்தியுடன்,

***சுசிலா சுப்ரமணியன்***



## 44. கிளிக்கண்ணி மெட்டு

அ) கற்பக விநாயகா
காரணம் நீயே சொல்வாய்
காண்பதற்கழகான – தந்தம்
உடைத்ததெனோ கணேசா – தந்தம்
உடைத்த தெனோ கணேசா
காரணம் நீயே சொல்வாய்.

ஆ) சிவன்வரம் பெற்றஅசுரர்
சிரகனம் கொண்டமரரை
சிறை பிடித்தாரென்றா – கணேசா
தந்தத்தால் கொல்லவாசுரரை – கணேசா
தந்தம் உடைத்தனையோ – க்ணேசா
தந்தத்தை ஆயுதமாக்கினீ.

இ) பாரதம் வியாசர்சொல்ல
பாறையில் எழுதவென்று
பாதிதந்தம் உடைத்து கணேசா
தந்தத்தால் எழுதினீரா – கணேசா
தந்தம் உடைத்தனையோ – கணேசா
எழுதுகோல் ஆக்கினீ.

ஈ) தந்தைசிவன் உடலில்பாதி
உன்தாய்க்கு தந்தாரென்றா
மாமான்விஷ்ணு உன்மாமிக்கு
மார்பில்இடம் தந்தாரென்றா
களிறும் பிடியுமாய்நீ – கணேசா
காட்சிதர வேண்டுமென்றா – கணேசா
தந்தம் உடைத்தனையோ – கணேசா
களிறு பிடியாய் காட்சிதரவா.

உ) (கவரி) மானின் கௌரவம் வாலில்
மயிலின் அழகு தோகையில்
யானையின் கா்வம் தந்தத்தில் – கணேசா
அதா்மத்தை வெல்ல வென்றா – கணேசா
அழகுதந்தம் உடைத்தீா் – கணேசா
தந்தம் உடைத்ததெனோ – கற்பக
விநாயகா காரணம் சொல்வாய்நீ.

# பொருளடக்கம்

